"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."

ஸத்யம்வத.—**Speak the Truth.**

**Hitch your Wagon to a Star.** **"To Thine own Self be True.**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 12.] 1903-ம்௵ செப்டெம்பர்௴ [இலக்கம் 5.


# "THROUGH NATURE TO GOD."

## A Kindergarten Sermon on Nature Study.

"CONSIDER THE LILIES OF THE FIELD, HOW THEY GROW"—*Christ.*

"THE ELEMENTS OF NATURE are THE MODE OF THE WILL OF GOD"—*Hermes Trismegitus.*

## பிரகிருதியினுண்மையிற் பரமனைக் காணலாம்.

"தத்துவமே ரண்டு தத்துவனங்குண்டு"—திருமூலர்.

"பள்ளத்தில் நீர்தங்கும் பான்மைபோ லுளவீச
னுள்ளத் துனையெனையு மொருங்கமர்த்திக் கொண்டானே."—காதற்செல்வி.

"பள்ளமுள்ள விடத்தில் நீர்தங்கும்" என்பது சகஜமாய் எல்லாருமறிந்த உண்மை. பிரகிருதியிலுள்ள ஒவ்வொரு தத்துவப் பொருளும் ஈசன் தன்மையை ஒவ்வொரு விதத்தில் விளக்குவனவாயிருக்கின்றன வென்பதும் உற்று நோக்கில் இதுபோல் உண்மையெனப்படும். உதாரணமாக, மலையினுச்சியில் விழ்ந்த நீர் "பள்ளத்தில் நீர் தங்கும் பான்மை போலுளவீசன்" நித்ய விதியை யனுசரித்து பள்ளமுள்ள விடந்தேடி அதை நிரப்பச் செல்கிறது. அதன் முயற்சியெல்லாம் பள்ளமுள்ள விடத்தில் தங்கவேண்டுமென்கிற ஒரு நோக்கங்கொண்டேயன்றி வேறல்ல. இந்த நோக்கத்தை நிறைவேற்றுவான் அது இடைவிடா தெடுக்கும் முயற்சியினலேயே அருவிகளும், நீரோட்டங்களும், நீர் விழ்ச்சிகளும், நதிப்பிரவாகங்

களும் இன்னுமுள்ள உடைப்பு, ஓடை, பயிருக்கு நீர்ப்பாய்ச்சல், ஏரி குளங்களுக்கு நீர் கட்டல் முதலிய பற்பல நாமரூபங்களால் வழங்கும் தோற்றங்களும், தொழில்களும் உண்டாகின்றன. இவ்வளவுக்கும் காரணமாயிருப்பது என்னவென்று ஆழ்ந்து விசாரித்தால் "பள்ளத்தில் நீர் தங்கும் பான்மை" யாயுள்ள ஈசன் செயலுக்குட்பட்டு மலையுச்சியில் விழுந்த நீர் இடைவிடாது அவர் தன்மையைக் காட்டியனுசரிக்க முயன்று வருவதேயாம். இதை மறந்ததோ வந்தது மோசம்! ஆறில்லை, குளமில்லை, வாய்க்காலில்லை, வரப்பில்லை, பயிரில்லை, பச்சையில்லை, அன்னமில்லை, ஆகாரமில்லை, அவற்றாற் சீவிக்கும் ஊர்வன, பறப்பன, நடப்பனவாகிய ஜந்துக்களில்லை, மனிதனுமில்லை, உலகமுமில்லை யொன்றுமில்லை யென்பதில் வந்து முடியும். ஆகையால் ஈசனுடைய சிருஷ்டிகளெல்லாம் இப்படியே அதனதன் இயற்கைக்கேற்க ஒருவிதத்தில் ஈசன் தன்மையைக் காட்டிவருகின்றன. அதனின்றும் எதுவும் சிறிதும் பிசகுவதில்லை. பிசகினால் வந்ததுமோசம். உலகமே தடைப்பட்டு நின்று போய்விடும். இதை மந்தமதியாம் ஊனர்கள் ஊன்றிப் பார்க்காத்தோஷத்தால் உண்மையில் உள்ளபடி யுணர்வதில்லை. உற்றுப்பார்த்துணர்ந்தால் உண்மை மென்மேலும் உள்ளபடி விளங்கும். ஒரு உண்மையை யுள்ளபடி ஆய்ந்துணர்ந்து பற்றினால், அதிலிருந்து இன்னொரு உண்மை நிர்மலமான ஆகாசத்தில் நூதனமாய் ஒரு நக்ஷத்திரம் தோன்றினா லெப்படியோ அப்படி யுளக்கண்ணுக்குப் புலப்படும். இப்படி பிரகிருதியில் நம்கண்ணுக்குப்படும் தத்துவப் பொருள்கள் எதையும்பற்றி அதனதனுண்மையை முற்றுமறிய முயன்று, அத்தத்துவப் பொருளோடைக்கியமாகி அதன் இரகசியத்தை முற்றும் பற்றினோமானால், ஒவ்வொன்றும் நம்மை அதனதன் உற்பத்தி மூலத்திற் கொண்டு போய்ச் சேர்த்து, சம்பூரணமாயுள்ள பராபரன் தன்மையை ஒவ்வொன்றும் அதன் ஸ்வபாவத்திற்கேற்கச் சக்கரவட்டமாய்ச் சிறிதும் பிசகாமல் வெகு அழகாய் ஒப்பொழிவின்றி புழைத்துப் பிரகாசிக்கச் செய்வது வெள்ளிடை மலைபோல் தெள்ளிதாய் விளங்கும். அதிரகசியமாம் இவ்வுண்மையை இப்பொழுது எடுத்துக்கொண்டு மலையுச்சியில் விழுந்த நீரைக்கொண்டு அறிந்து கொள்வான், அஃதோடு ஐக்கியப்பட்டு மனோலயமடைந்து, அதுபோம்வழி வரும்வழியென்னவென்று அறிந்து கொள்வோம்.

உண்மையறியு முளவு—The Principle of "Inner connection."

இதை வாசிக்கும் அன்பர்களே, இப்பொழுது நீங்களுமில்லை, நானுமில்லை; இருவரு மற்று எங்கே போனோமென்றால், நாமெல்லாரும் தண்ணீர்த் திவலைகளாக மாறிப்போய் விட்டோம். ஏனப்படி மாறவேண்டுமென்றால், எந்த இரகசியத்தையுமறிய இது ஒன்றே யுண்மையானவழி. இரகசியமென்பது இரண்டாம் பேரறியக்கூடாத உண்மை. இரண்டாம் பேரறியக்கூடாத உண்மையை துவைதமாக (அதாவது சொல்கிறவன் கேட்கிறவன் என இரண்டாக) விருந்து அறிவது எப்படி சாத்தியமாகும்? அசாத்தியமே! யாராவது ஒரு இரகசியத்தைச் சொல்லக்கேட்டுத் தெரிந்ததாகச் சொன்னால், அதை நம்பவே நம்பாதேயுங்கள். அது சுத்தப் பொய். வாக் ஜாலமன்றியதில் வேறில்லையென்று நான் சத்தியமாகச் சொல்வேன். முதலாவது, ஒருவன் சொல்லி மற்றொருவன் கேட்கக்கூடியவஸ்து "இரகஸியம்" அல்ல. இரண்டாவது, சொல்கிறவன், கேட்கிறவன் என்கிற பேதபுத்தியோடு சொல்லப்பட்ட "இரகசியம்" வார்த்தை மட்டிலுண்மையா யிருந்தாலும் அது உண்மையில் உள்ளத்திலேறாது. ஆதலால் தான் ஸத்

யம் அல்லது ப்ரஹ்மஞானம் "குப்தவித்தை" யென்றும், "பரமரகசியம், சொன்னால் தலைவெடித்துப்போ" மென்றும், சற்சீஷனல் சத்குருமுகமாகவின்றி மற்றப்படி கேட்கத் தக்கதல்லவென்றும் இப்படிப் பலவிதமாக மேலோர் அதனுண்மையை வற்புறுத்திக் கூறியிருக்கிறார்கள். மனோலயமானலன்றி *\ "உண்மையான இரகசியம்" உள்ளத்திலேறாது. எல்லா இரகசியங்களிலும் மேலானபரமரகசியம் "ப்ரஹ்மஞானம்". இந்த இரகசியம் சிருஷ்டிவர்க்கங்கள் எல்லாவற்றினிடத்தும் அடக்கமாயிருக்கின்றது. இதைப்பற்றிப் பரிக்கும் வகையறியாது கோடானுகோடி ஜனங்கள் போம்வழி வரும்வழி தெரியாது, பிறப்பதும் உண்டுடுத்துறங்கி, வளர்ந்து தேய்ந்து இறப்பதும், மறுபடியும் மற்றொரு தேகமெடுத்துப் பிறப்பது மிறப்பதுமாக, சுற்றுச்சுழலி லகப்பட்ட துரும்புபோல் உழன்று சுழன்று கீழேபோவதும், பிறகு மேலே வருவதும், மறுபடியும் இன்னுமோர் சுழியி லகப்பட்டுச் சுற்றுவதுமாகச் சுழன்றலுத்துழன்று வருகிறார்கள். இது நிற்க.

ஐக்கிய தத்துவம்—The Principle of Unity.

இப்போ நீர்த்திவலைகளாய் விட்ட நாம் (இதை வாசிக்கும் நீங்களும் நானும்) மழைத்தாரைகள் வழியாக ஆகாசத்திலிருந்து இமயமலைச் சிகரத்திலிறங்கி விட்டதாக நினைத்துக் கொள்வோம். "பள்ளத்தில் நீர்தங்கும் பான்மை" நம்முடையது. பள்ளமுள்ள விடத்தில் நீர் தங்கவேண்டும்; ஏனென்றால் அது நம்முடைய தன்மை. நாம் வானின்றும் வீழ்ந்து உலகத்தில் வந்து அவதரித்தது அதற்காகவே யன்றி வேறொன்றுக்குமல்ல. "பள்ளமுள்ள இடத்தில் நீர்தங்கும்"; ஆகையால் நம்மைச்சுற்றி யெங்கேபள்ளமிருக்கிறதென்று பார்ப்பது நம்தொழில்; அதுவே நமக்கு ஜீவியம். நாம் ஜீவனெடுத்ததற்குப் பலன் பள்ளமுள்ள இடத்தில் போய்த்தங்குவது. இது நம்மை யெங்கு கொண்டுபோய் விடுமோ அதைப்பற்றி விசாரமில்லை. நம்மிடத்தில் வேற்றுமையின்றி ஒற்றுமை மட்டுமிருந்தால் இந்த ஒரு செயலே நம்மை உற்பத்தி ஸ்தானமாம் மூலகாரணப் பொருளினிடம் கொண்டுபோய்ச் சேர்க்கு மென்பது சத்தியம்.

ஸ்வபாவ கிருத்தியம் லீலாவிநோதம்—Nature needs no effort.

பள்ளமுள்ளவிடத்தில் போய்த்தங்குவது நமக்கு ஸ்வபாவமாய் அமைந்த தொழிலாதலால், அதில் நமக்கு சிரமமில்லை; வருத்தமில்லை; வேலையில்லை. அத்தொழில் நமக்கு ஸ்வபாவமாக அமைந்துள்ள காரணத்தால் அது நமக்கு ஒரு நிருத்தமாம்: கூத்தும் குதிப்புமேயன்றி யதில் நமக்கு வேலையொன்றுமில்லை. எல்லாம் விளையாட்டு. ஸ்வபாவமா யமைந்துள்ள அத்தொழிலில் பிரவர்த்திப்பதால், நமக்குள்ளடங்கியுள்ள சக்திகளெல்லாம் வெளியாகித் துலங்குகின்றன. ஆகையால் அதைப்பற்றி நீர்த்திவலைகளாகிய நாம் சிறிதும் கவலைப்படவேண்டியதில்லை. கவனிக்கவுங்கூட வேண்டியதில்லை. ஏனெனில் அதை மாற்ற நம்மைப்படைத்த ஈசனாலுமில்லை. ஈசனுடைய தன்மையே நம்முடையதாயிருப்பதால், ஈசன் தான்மாறாது நம்முடைய ஸ்வபாவத்தை மாற்றமுடியாது. ஆகையால் அதை புணர்ந்தமட்டில் உள்ளத் திருக்கவிட்டுப் பின்னே நாம் கவனிக்கவேண்டிய தென்னவென்று விசாரிப்போம். பள்ளமுள்ள விடத்தில் நாமேன் தங்கவேண்டு மென்று ஊன்றி நின்று ஊகித்து ஆராய்ந்து பார்த்தால், நம்மை நமக்கு

* c. f. Froebel's great word "inner connection" & its meaning.

மூலகாரணமாம் பொருளினின்றும் பிரித்துச் சிருஷ்டித்த கடவுள், அந்த மூலகாரணப் பொருளைத் திரும்பியும் நாம் போயடைவதற்கு இவ்விதியைச் சர்வசாதகமாயிருக்க நம்முள்ளத் தமைத்து "எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்" என்கிற உண்மை ரகஸியத்தையும் உபதேசித்து நம்மை யுலகி லனுப்பியுளார் என்பது நன்றாகப் புலப்படும். இரண்டு சொட்டுத் தண்ணீரை சமமான கண்ணாடித் தரையில் ஒன்றின்மேலொன்றுபடாது அருகிலிருக்க அமைத்தால், அவையிரண்டும் ஆணோடு பெண்சேருவதுபோல் ஒன்றையொன்று தழுவிச் சேர்ந்து கலந்து ஐக்கியமாவதைக் காணலாம். இதை ஆகர்ஷண சக்தியென்பார்கள் சாஸ்திரவிற்பன்னர். தண்ணீர்த்திவலைகளாகிய நாமே, மனுஷசீவன்களாகி அப்பொழுது நமக்குரிய சுயவுருவெடுத்தோமாகில், இதே ஆகர்ஷண சக்தியை **அன்பு** என்று சொல்வார்கள். பேர் வித்தியாசத்தினால் நாம் மயங்கத் தேவையில்லை. தொழிலொன்றாயிருக்க, ரூபத்துக்குத் தக்கவாறு நாமம் வேறுபட்டால் அதில் மயக்கமென்ன நமக்கு? சக்தி யொன்றானால் சாஸ்திரம் அதைப் பலவிதமாகப் பேரிட்டழைக்கட்டுமே. அதனால் அதன் தன்மை மாறுவதில்லையால், நாம் நமக்குள் அதைப் பற்றித் தர்க்கித்துச் சண்டைபோடத் தேவையில்லை. ஆகையால் தண்ணீர்த் திவலைகளாகிய நாமமட்டும் ஒன்றுபட்டு ஒரு திரளாயிருந்தால் நம் ஸ்வபாவத்தினாலேயே நாம் ஆதியில் எந்தப் பொருளினின்றும் வந்தோமோ அந்தப் பொருளைச் சென்றடைந்து அஃதோடைக்கியமாகி, **அனேகம்** என்கிற இப்பொழுதுள்ள தீராவேற்றுமை யொழிந்து **ஏகம்** என்கிற சமரஸ பாவமடைந்து நாம் ஒற்றுமையாயிருக்க வேண்டுமென்கிற கவலையுமழிந்து ஆனந்தமாய் அழிவற்றிருக்கலாம்.

### தன்மய தத்துவம்—The principle of like to like.

இப்படி ஹிமோத் பருவதத்தின் உச்சியில், ஹிமவான் தன்மகளாக அங்கீகரித்தேற்றுத் தன்னுதரவில் வைத்து வளர்த்த உமையவளுக் கொப்பான **உறைபனி** யென்னும் தண்ணீர்த் திவலைகாயகி உற்சாகம் பொங்கிப் பிரசங்கித்து நிற்க, உதராக்னிக் கொப்பான அவளுள்ளத்திருந்த வெப்பம் வெளிப்பட்டுத் தன்னை யொத்துத் தன்மயமாய் விளங்கிய சூரிய வெப்பத்தோடு கலந்துறைந்து ஐக்கியப்பட்டு நின்றது. இதை யெல்லாம் கண்டு கேட்டுக் களித்திருந்த பர்வதராஜன் "எதுவும் தன்னொத்ததைக் கூடுவான் தன்மயமாகித் தானே தானாய் விளங்கப்படும் பாடும், அவசரமும் அப்பப்பா! அதிசயம், அதிசயம்!" என்று அதிசயித்து ஆனந்தம் பொங்க, அதிசயானந்தம் அழிவுள்ள தென்று கண்டு, நிரதிசயானந்த மெய்துவான், மனதையொழிக்க மௌனஞ்சாதித்து சதாநிஷ்டையி லமர்ந்து அசைவற்றிருந்தான்.

### நாம ரூபோற்பத்தி—The Law of Manifestation

மலைமகளொத்த உறைபனியி னுள்வெப்பமும் அவள்தலைமகனும் பரஞ்சுடரொத்த பாஸ்கரன் கதிரொளிவெப்பமும் ஒன்றுபட் டென்றும் நீங்காக்கலவியிலிருக்க, இந்தவுண்மையாம் ஸம்யோகத்தின் காரணமாக, மலைமகள் நெற்றி முத்து முத்தாய் வேர்த்துக் கொட்டுவது போல், உறைபனியினின்றும் நீர்த்திவலைகள் தோன்றின. இவை தன்னொத்துத் தன்மயமாயிருந்த மழைத்தாரைகளின்வழி யிழிந்த நீர்த்திவலைகளோடுகலந்து கூடி புறவாடி ஒன்றுபட்டு ஒருதன்மையயாகி, மலைச்சரிவிலெங்கு மொரேபள்ளமாயிருக்க, அதன் வழியிறங்கிக்

கடுகவேகப[illegible]ந்து, பள்ளங்கண்டவிடத்தில் தங்குவதே நோக்கமாய்ப் பாய்ந்து பாய்ந்து ஓட்டமும் குதிப்புமாய் ஓடிவந்தன. மலைச்சாரலில் தபசுசெய்து கொண்டிருந்த அருந்தவ முனிவர்கள் இந்நீரோட்டத்தை அருவி யெனப் பெயரிட்டு அவர்கள் தாகசாந்திக் குபயோகித்தார்கள். அவர்கள் தங்கள்கமண்டலத் தெடுத்தருந்திய நீர்த்திவலைகள்போக, மற்றவை "பள்ளத்தில் நீர்தங்கும் பான்மை எங்களது" என்று முணுமுணு வென்று ஜபித்துக்கொண்டு, ஓங்காரசப்தம் ஆங்காரமானாற்போல், அதிவேகமான மலையருவியாக வோடிப்பாய்ந்தன. இப்படிக் கொஞ்சதூரம் செல்லவும் அங்கேயொருபக்கத்தில் ஓர் பெரியமலைப்பிளவுகண்டு அதனுண்டான செங்குத்தான பள்ளத்தில் தொப்பென்று குதித்துப் பேரிரைச்சலிட்டுக்கொண்டு அப்பள்ளத்தை நிரப்பப் பாடுபட்டுழைக்கலாயின. சுமார் 100 அடி உயரத்திலிருந்து தண்ணீர்த்திவலைகள் ஒன்றுசேர்ந்து அங்கம்பெருத்து ஆகிருதி பலப்பட்டு, மலைமகள் தன்முந்தாணியை முன்னேமடித்துச் சொருகாதுபின்னே தொங்கவிட்டு, அது காற்றிற்பறக்க அவள் ஒய்யாரமாய், பாதச்சிலம்பு பொலிக்க மெட்டிகள் தாளம்போட, தன்காதற் றலைவனை நினைத்து அதிவேகமாய் மலையிலேறிச்செல்லமுயன்று முயன்றும், அடிசறுக்கி அகழில்விழுந்து சங்கடப்பட, தன் முயற்சியில் சிறிதும் குன்றாதுழைத்துவருவாள் போல் அக்காட்சி கண்ணுக்கு ரமணீயமாகவும், மனதுக்கு கம்பீரமாகவும், உள்ளத்துக்குண்மையாகவும் தோற்றிற்று. அப்பேரிரைச்சல்கேட் டோடிவந்த வேடர்கள் அதைப்பார்த்து இது "நீர்வீழ்ச்சி" அல்லது 'மலையருவி' யென்று பேசிக்கொண்டார்கள். யார் என்ன பேசிக்கொண்டாலென்ன? நீர்த்திவலைகளின் எண்ணமும் நோக்கமும் தொழிலும் சிறிதும் மாறவில்லை.

### எப்படியும் தத்துவம் மாறுவதில்லை—Inner Principle ever true.

பள்ளமுள்ளவிடத்தில் தங்கவேண்டியது ஒன்றே அவைகளின் நோக்கம். மேடுபள்ளத்தின் வித்தியாசம் அதிகம் ஆக ஆக அந்த வித்தியாசத்தைப்போக்கிச் சமநிலையடைய வேண்டியது நீர்த்திவலைகளின்கடன். ஆகையால் அவை பெரும்பள்ளமுள்ளவிடத்தில் உல்லாசமாய் நடந்துகொண்டிருந்த புருஷனைச் செந்தேள்கள் பத்துக், கருந்தேள்கள் பத்துப், பவ்வத்து இடங்களில் கொட்டிவிட்டால், அவன் எப்படித் துடித்துத் துடித்துக்கொண்டு தலைகால் தெரியாமல் குதித்தோடிக் குப்புற விழுவானோ அப்படி, சமசார்புள்ளவிடத்தில் ஒய்யாரமாய் ஓடிவந்த நீரோட்டம், பெரும்பள்ளங் கண்டவிடத்து ஆத்திரமும் அவஸரமுமாய் ஓடிவீழ்ந்து தலைகால் தெரியாமல் தத்தளித்து ஆவேசங் கொண்ட ஸ்திரீபோல் அலங்கோலப்பட்டுத் தவிக்கிறது. இவ்வளவு தாபமும் தவிப்பும் ஏன்? என்னத்திற்கடா அப்பாவென்றால்? ஒன்றுக்குமில்லை; சமநிலையடைவதற்கன்றி வேறில்லை. பள்ளம் நிறைந்து நீர் நிலை சமரசப்பட்டுப்போனால், இந்தத் தவிப்பு உதைப்பு எல்லாம் தானாக நின்றுபோய்விடும். ஏனெனில் அதன் நோக்கம் நிறைவேறிப் போய் விட்டது. தண்ணீர் இப்பள்ளத்தில் விழும்வேகத்தின் சக்தியைக்கண்டு, அடுத்தவூரிலுள்ள வெள்ளைக்காரன்வந்து அதைத்திருப்பித் தன்வசப்படுத்தி அந்நகரிலுள்ள யந்திரங்களையெல்லாம் இயற்றுவிக்கவும் இரவில் நகரையெல்லாம் பிரகாசிக்கச்செய்யவும் மின்சார சக்தியாக மாற்றியுபயோகித்தான். உபயோகிக்கட்டும்: அதனால் தண்ணீர்த்திவலைகளுக்கு வந்தலாபமாவது நஷ்டமாவது ஒன்றுமில்லை. அவைகளின் நோக்கம் மாறினதில்லை, பள்ள

முள்ளவிடத்தில் போய்த் தங்கவேண்டிய தொன்றே அவைகளின் நோக்கம். அதுவொன்றே அவைகளின்செய்கை. மேடுபள்ளமில்லாமல் சமநிலைப்பட்ட விடத்து அசைவற்று அமர்ந்திருப்பதே அவைகளுக்குத் திர்ப்தி. "பள்ளத்தில் நீர்தங்கும் பான்மை" யொன்றே நீர்த்திவலைகளுக்கு சத்தியம்—மாறுமலுள்ளது. அவைகளுக்கு அதுவே விதி: அதுவே கதி: அதுவே அந்தமுமாம். அந்த உண்மையான உள்ளத் தன்மையைப்பற்றி யனுஷ்டித்தலே அவைகளுக்கு சக்தி முத்தியெல்லாம் கொடுக்கும். மின்சாரமுண்டுபண்ணும் சக்தி நீர்த்திவலைகளுக்கு எப்படியுண்டாயிற்று? "பள்ளத்தில் நீர்தங்கும் பான்மையால்." இப்படியே ஒவ்வொரு கேள்விக்கும் இந்த ஒரு உத்தரமே பொருந்தும். இது பிசகினல் எல்லாம் பிசகிப்போம். இந்த ஒரு விதிக்குண்மையாக விருந்தால் எல்லாமகிமையும் அதற்குத் தானுக சித்திக்கும். இது நிற்க.

தத்துவவினயன்டயும்வரையில் தத்துவத்துக்கொழிவில்லை.—The inner principle works through to the end.

அந்த நீர் விழ்ச்சியில் தண்ணீர் பல்லாயிரம் வருஷங்களாக இன்னும் விழுந்து கொண்டிருக்கின்றது. அந்தப் பேரிரைச்சலும், கொதிப்பும், கொந்தளிப்பும், நுரையும், சப்தமும் இன்னமும் ஓய்ந்தொழிந்தபாடில்லை. இல்லாவிட்டாலுமென்ன! நீர்த்திவலைகளாகிய நமக்கு அதைப்பற்றிய விசாரம் வேண்டியதில்லை.

விதிக்குமாறுகத் தோற்றியபோதும் விதிமாறுவதில்லை—Apparent change involves no real contradiction of principles.

பள்ளமுள்ளவிடத்தில் போய்த்தங்கவேண்டியது நம்முடையகடமை. பகவான் நம்மைச்சிருஷ்டித்ததே இதுவொன்றுக்காகவே: இந்த விதியை விளக்கலே நமக்குச்சிவநோக்கமாக விருக்கவேண்டி நம்மைச் சிருஷ்டித்தார். அதைச்செய்து முடிப்பதே நம்கடன். இதற்கு இடையூறுகள் எத்தனையோ நேரிடலாம். காசிப்பட்டணம் போனல் ஜனங்களுக்கு குடிதண்ணீர் வேண்டியதினிமித்தம் வெள்ளைக்காரன்வந்து நம்மை யந்திரங்களால் கீழேயிருந்து மேலோடும் படியாகச்செய்வான். செய்தாலுமென்? நம்முடைய குணமறிந்தே யவன் அவ்வளவு பாடுபட்டு நம்மை பார்ப்போர் அதிசயிக்க நம்விதிக்கு மாறுகச் செல்லவைக்கிறுன். உயரத்தில் தூக்கிவிட்டால் பள்ளத்தில் நாமே பாய்வோம் என்கிற நம்பிக்கையவனுக்கில்லாவிட்டால், அவன் ஆற்றுப்பள்ளத்திலிருந்து நம்மை ஆகாயத்தொட்டியில் ஏற்றிவிடப்படாதபாடும் பட்டுழைக்கமாட்டான். அப்படிக் கீழேயிருந்து மேலேசெல்லும் பொழுதும், நீர்த்திவலைகளாகிய நாம் நமதுவிதிக்கும் சுபாவத்திற்கும் விரோதமாக நடப்பதில்லை. சூக்ஷ்மபுத்தியில்லாதவர்கள் வித்தியாஸமாய் நினைக்கலாம். ஆனல் இந்தத்தந்திரம் செய்யும் யந்திரம் நிர்மித்தவன், நம்முடைய குணமறிந்து நம்வழியறிந்து நம்விதியை யனுசரித்தே நம்மிடத்தில் வேலைவாங்குகிறுன். அவன் வேலை வாங்குவதென்ன? நாம் நம் ஸ்வபாவப்படியே நடக்கிறோம். அவன் நம்விதியையுள்ளபடி யுண்மையாயுணர்ந்து தன் சூக்ஷ்மபுத்தியால் ஏதோ நம்மை வென்றுவிட்டதுபோல் மந்தமதிகளான ஜனங்களுக்கு ஜாலம் செய்து காட்டுகிறுன். உண்மையில் தண்ணீரிணிறக்கும் யந்திரத்தின் குழாய் வழியாக நீர் விழ்ச்சியில் விழும்வேகத்தோடு நாம்மேல்நோக்கிச் செல்வதினும் நமக்கியல்பான "பள்ளத்தில் நீர் தங்கும் பான்மை"யை யனுசரித்தே நடக்கிறோம். குழாயிலுள்ள வாயுவை வெளிப்போக்கி, வெளிப்போந்த வாயுவின் ஸ்தானததில் வேறுவாயுவை யுட்

புகவிடாமல், சூன்யமாக்கப்பார்ப்பதால், சூன்யத்துக்கிடங் கொடா சூக்ஷ்ம விதிப்படி தண்ணீர், அக்குழாயில் பாய்கிறதென்பார்கள். ஆனால் நீர்த்திவலைகளாகிய நமக்கு சூன்யத்தை நிரப்ப யாராவது மான்யம் விட்டிருக்கிறார்களாவென்ன? அதொன்றுமில்லை. பள்ளமுள்ளவிடத்தில் போய்த்தங்குவது நமதுஸ்வபாவம். வெள்ளைக்காரன் குழாயை நீரில் முழ்கவைத்து மேலே யுள்ளவாயுவை வெளியில் போக்குவதினால் நம்தலைக்குமேலே பள்ளம் பறிக்கிறான். பள்ள முள்ளவிடத்தில் பாயவேண்டியது நம்கடமை.

செயற்கை வித்தியாசம் இயற்கையிலில்லை—Man-made differences make no differance in Nature.

ஆனால் பள்ளமென்கிற வார்த்தை சம்பந்தமாய் "மேல்" என்றும் "கீழ்" என்றும் சுட்டிச்சொல்லும் வித்தியாசம் நமக்கில்லை. அது இயற்கையிலுள்ளதில்லை. மனிதன் தனக் குப்பொருந்த, தன்னொத்தவர்களோடு பேசிப்புழங்க ஏற்படுத்திக்கொண்ட செயற்கை வித்தி யாசம் 'கீழ்' 'மேல்' என்பனவெல்லாம். உண்மையில் கீழுமில்லை, மேலுமில்லை. ஆகையால் மனிதன் "சணப்பன் விட்டுக்கோழி தானாக விலங்கிட்டுக் கொண்டதுபோல்." உண்மையில் இல்லாத வித்தியாசங்களையுண்டாகக் கற்பித்துக்கொண்டு, தன்னுடைய கற்பனையாகிய மாயாவலை யிற்பட்டுமயங்கினால், கற்பனாசக்தியில்லாமல், உண்மைக்கு உதாரணமாக மட்டுமிருக்கச்சிருஷ் டிக்கப்பட்ட நீர்த்திவலைகளாம் நமக்கு மனிதன் மயக்கைப்பற்றியேன்விசாரம்! நாம் உண்மை வழிப்பட்டு விலகாதிருக்கவேண்டியது நமது கடமை. மனிதன் சங்கற்ப விகற்பசக்திகளைக் கொண்டு தன்னோடு தானே மல்லுக்குநின்று மஹாயுத்தம் செய்யட்டும். அதைப்பார்த்து நிற்கவும் நமக்குப் பொருந்தாது.

இயற்கை விதி என்றும் மாறாது—Nature works by Universal Law

"பள்ளத்தில் நீர்தங்கும் பான்மை"யே நம்மது. அதுவொன்றேநமக்குசத்தியம். அது வொன்றே விதி, அது ஒன்றே கதி. அது ஒன்றை யனுஷ்டித்து, அவசர அவசரமாய் ஆத்திர மும், காத்திரமுமாய், நம்நிலைகண்டு நாம் தங்குவதே நமக்கு எல்லாம். ஆகையால் நமக்குப் பொருந்தாத—பொருந்தாமைகாரணமாக நமக்கு இல்லாத, அதாவது நீர்த்திவலைகளாகிய நமக்கு அசத்தியமான—விஷயங்களைப்பற்றி வியவகரிக்க நமக்குப் பாத்தியமில்லை. அது உண் மையில் சாத்தியமுமில்லை. ஆகையால் பள்ளமுள்ளவிடத்தில் போய்த்தங்குவோம். சமநிலை பெற்றவிடத்திலன்றி வேறுவிதமாக நமக்கு க்ஷணப்பொழுது தங்குவதற்கில்லை: அந்த சமநிலை பெறும்வரையில் நமக்குச்சலனமேயன்றிச் சாந்தநிலை—அசைவற்றுத்தங்கும் நிலை, கிடைக்காது. ஆகையால், இந்த நீர் வீழ்ச்சியில் நின்று இந்த மேடுபள்ளத்தை நிரவிப்பார்க்கவும் நமக்குத் தரிக்கவொண்ணாது. ஆகையால் பள்ளமுள்ளவிடத்தில் ஓடிப்பாய்வோம்— நம்மோட்டத்தில் நிறைந்த பள்ளம் நிறையட்டும், குறைந்த பள்ளம் குறையட்டும்.

பிரகிருதிவிதிக்குப் பற்றில்லை—Detachment from results, another characteristic of Nature.

உலகிலுள்ள பள்ளங்களைத் தூர்ப்பது நம்வேலையல்ல. பள்ளமுள்ளவிடத்தில் போய்த் தங்க வேண்டியது நம் நோக்கம். ஓய்வு எப்போ உண்டாகும்? ஒழிவு எப்போ உண்டாகும்? சலனமற்று எப்போ விருக்கலாம்? பிறந்தவிடம் போய்ப்பொருந்துவது எப்போ? எப்போ, எப்போவென்று எப்போதும் ஏக்கம்பிடித்தலையும் நமக்கு இங்கேயெல்லாம் தங்கி

யிளைப்பாறப் பொறுக்காது. ஆகையால் நடுமையத்தில் ஒருகடுவழி செய்துகொண்டு ஓடுவோம். இடைபிங்கலையென்னு மிருகரையிலும் சென்றால் போக்கும் வரத்துமே யொழியக் கதிமோக்ஷம்கிட்டாது. வாய்க்கால் ஓடைகளில் புகுந்தால் வல்லடிவழக்கேயன்றி வேறொன்றுமில்லை. நடுவழியிலெங்களை யெடுத்து உபயோகிப்பவர் உபயோகிக்கட்டும். பலனடைபவர் அடையட்டும். எங்களால் நஷ்டப்படுவோர் படட்டும். யார் வாழ்ந்தாலும், யார் ஆழ்ந்தாலும், "பள்ளத்தில் நீர்தங்கும் பான்மை" ஒன்றே யெங்களுக்குரியது: அதற்கு விரோதமாக நடக்கமுடியாது: அப்படி நடக்கும் சக்தி யெங்களுக்கில்லை: அது கொடுத்தாலும் வேண்டாம். வேகுவேகென்று வழிநடப்பதே யெங்களுக்குத் தொழில். எங்களுக்கு உபகாரம் செய்யவேண்டுமென்கிற எண்ணமுமில்லை. அபகாரம் செய்யவேண்டுமென்கிற எண்ணமுமில்லை. எங்கள் எண்ணமெல்லாம் ஒன்றே—"பள்ளத்தில் நீர் தங்கும் பான்மை" யெங்களது. அதற்கு உண்மையாயிருந்து, சேரிடம் சேர்ந்து தங்கவேண்டும்: இது ஒன்றுதான் எங்கள் எண்ணமெல்லாம்.

"வரும்வழி, போம்வழி, மாயர்வழி" யறியவே ஆத்திரம்:—The eternal "Whence I came, Whither I go"

இந்த ஒரு எண்ணத்தைப்பற்றி, எங்களுக்குரிமையான ஒரு தத்துவத்தை யனுசரித்து நாங்கள் ஈடேறவேண்டும்—அதாவது, ஆதியில் எங்கிருந்து வந்தோமோ அங்குபோய்ச் சேரவேண்டியது. இந்த ஒரு நோக்கத்தோடு இந்த ஒரு எண்ணத்தையே மூலமந்திரமாக ஜபித்துக்கொண்டு நீர்த்திவலைகள் தன்னினத் தாரிடத்து குணமென்றும் குற்றமென்றும் பாராமல், "நீர்த்திவலைகளெல்லாமொன்றே" யென்கிற சமரஸபாவனையோடு, தங்களுக்கு வழியில் நேர்ந்த இடர்களையெல்லாம் இலக்ஷியம் செய்யாது, "என்னையணைச்சேர்ந்து சுகிப்பது எப்போ, எப்போ?" என்று சோகமும் தாபமும், துரிதமும் சேர்ந்தகுரலோடு வேகுவேகென்று வழிநடந்து சென்றன. மலைகளை விட்டு மைதானத்தையடைந்தன. நாட்டில் நகரிலுள்ள புண்ணியர்களெல்லாம், அதை யெதிர்கொண்டழைத்து, தங்களைக்காத்துப் போஷிக்கவந்த தர்மதேவதையென்று பூஜித்து "கங்கை" யென்று பேரிட்டுத் துதித்தார்கள். இப்படிப் பலதுறையாக வந்த நீரோட்டங்கள் ஒன்றொன்றாக வந்துசேர, தாயைவிட்டுப்பிரிந்த தனயர்கள், சகோதரவாஞ்சையோடு ஒன்றுகூடி ஒருமைபாராட்டுவதுபோல் பஞ்சகங்கைகளும் ஒன்றுகூடி ஒருபெருநதியாயிற்று. பாரிலுள்ள ஜனங்களெல்லாம் புண்ணியநதியென்று பேரிட்டுப் பூஜித்தார்கள். பிச்சோலை வளையலோடு பூவையும், பழங்களையும் ஆற்றிற்போட்டு அருச்சித்தார்கள். பிணங்களையும் சவங்களையும் புண்ணியநதியென்று அதில்போட்டு இறந்தார்க்கிருந்தார் புனிதம்தேடினார்கள். பலர் துன்பம் பொறுக்காது துக்கமேலீட்டால், தள்ளையைத்தேடும் தனையர் தள்ளாடிக் குழியில் விழுவதுபோல், உண்மையாம் உலகயாதாவை யுணரமாட்டாமல், கங்கையை நம்பி ஆற்றில் வீழ்ந்து ஆருயிர் துறந்தார்கள். ஆனால் கங்கையோ ஒன்றுக்கும் கவலைப்படவில்லை. சுத்தமென்றும் பார்க்கவில்லை. அசுத்தமென்றும் பார்க்கவில்லை. உபகாரமென்றும் உன்னவில்லை. அபகாரமென்றும் அடங்கவில்லை. உலகெலாம்போற்றும் உத்தம நதியாகியும், நீர்த்திவலைகளின் நோக்கம்மாறவில்லை: எண்ணம்மாறவில்லை: அவைகளின் விதியும் மாறவில்லை. "பள்ளத்தில் நீர்தங்கும் பான்மையே" யெங்களது என்கிற மந்திரகோஷத்தைத் தவிர வேறொன்றும் கேட்கவில்லை.

இகழ்ச்சி புகழ்ச்சி பார்ப்பதில்லை—Indifferent to praise or blame.

தன்னைத்துதித்தார், மதித்தார், இகழ்ந்தார், புகழ்ந்தார் யாரையும்இலக்ஷியம் செய்து நிற்கவில்லை. தன்னைக்கொண்டு பல்லாயிரம்ஜனம்பிழைப்பதையும்பார்த்துநிற்கவில்லை. பல்லாயிரம் ஜனம்தங்கள் நாடுநகரமெல்லாம் வெள்ளப்பாழாகித் தவிப்பதையும் பார்த்துஇரங்கவில்லை. "பள்ளத்தில்நீர்தங்கும் பான்மையேபான்மை" யென்றுபள்ளமுள்ள இடமெல்லாம் வெள்ளம்நிறைய வேகு வேகென்று வேகமாய் ஓடியது. அது என்ன ஆத்திரமோ, என்ன அவசரமோ! அந்த ஆத்திரத்தையும் அவசரத்தையும் அதோடு ஒன்றுபட்டுப்பார்த்தால் தெரியுமேயன்றி வார்த்தையால் சொல்ல வன்மை யில்லை யெனக்கு. என் தாய் "பத்துத்தேள் பத்துநண்டுகள் ஏககாலத்தில் கடித்துவிட்டால் எப்படி பறப்போமோ அப்படிப்பறக்கவேண்டும்" என்றாள்: "நாலுபக்கங்களிலுமுள்ள வீடு நெருப்புப்பற்றிக்கொண்டால், இருந்த இடத்தைவிட்டோட எப்படி அவசரப்படுவோமோ அப்படி யவசரப்படவேண்டு" மென்றாள்.—ஸத்யத்னதபடைய.

ஆத்திர அவசரமும் ஐக்கிய சாம்பிராஜ்யமும்—Impatience and Ineffable Desire to reach the Goal in sight.

மலையுச்சியில் கண்டு பரிச்சயம் செய்துகொண்ட இந்த நீர்த்திவலைகள் "கங்காநதி" யென்னும் பேர்பெற்று ஓடுகிற ஓட்டத்தையும் வேகத்தையும், அதன் ஆத்திர அவசரத்தையும் ஆடம்பரத்தையும் பார்த்தால் என் தாயின் உவமையிற்சொன்ன மனிதர்கள் ஆத்திர அவசரமும் இதற்கு ஈடாகாதென்று நன்றாகத்தெரிகிறது. அது என்ன வேகமோ, என்ன அவசரமோ, மனோவாக்குக்கெட்டாத வேகமும் அவசரமும் எப்படியிருக்குமோ! அதையனுபவத்திற் கண்டறிந்து கொள்ளவேண்டுமேயல்லாது, வாக்கால் எழுத்தால் விளக்கமுடியாது. பட்டவனுக்கேதெரியும்பாடு: கெட்டவனுக்கேதெரியும்கேடு: உண்டவனுக்கேதெரியும் உணவு: விண்டவனுக்கே தெரியும்வார்த்தை. எதுவும் அனுபவித்தாலன்றி யுள்ளபடிவிளங்காது. சமுத்திர சங்கமுகத்தினருகில் நின்றுகொண்டிருந்த என் காதில் இரண்டேசப்தங்கள் கேட்டன. ஒரு புறத்தில் கங்கைப்பிரவாகமாகவோடும் நீர்த்திவலைகளின் ரீங்காரசப்தம் "எப்போ? எப்போ?" என்று இடையறாது ஒலிக்கும் ஓசையின் தொடரொலியாகிய "ஓ" என்னும் ஈற்றொலி இடையறாதுதொடர்ந்துவரும் ஓங்கார சப்தம் வண்டின் ரீங்காரம்போல் காதுக்கினிமையாய்ப் பட்டது. மற்றொருபக்கத்தில் சமுத்திரராஜன் தன்னையடையவிரும்பி அவசர அவசரமாய் உள்ளங்குதிப்பினும் அமர்ந்த நடையும் குனிந்ததலையுமாய் வரும் தன் காதலியாம் கங்கையைத் தன் அலைகளாகிய கைகளைநீட்டி, குதூஹலமிகுதியாலெழும் கொண்டாட்டத்தின் ப்ரதியொலியாகிய ஓங்காரம், கங்கையின் ரீங்காரத் தோடுகலந்து நாதகீதமுண்டாக, மங்கலவாத்யமுழங்க மணவறைபுகுந்த நாயக னாயகிபோல் அவளையாலிங்கனம்செய்து, இருவருமேகமாகி, நாமரூபமற்று, பேதாபேதமற்று, எங்கும் நிறைந்து, ஏகரஸமாய், நிலையறிந்து நின்ற நிர்மலவஸ்துவாய் ஆனந்தக்கண்டு நான்சிந்தையிலாழ்ந்து சிந்தனையிழந்து கருணைபங்கடலாம் கடவுளை நினைந்து நினைந்து நைந்துருகி, **நான்** என்னும் பாவமழிந்து, நமனுண்டென்கிற நினைவுங்கெட்டு, தானே தானாய்த் தன்மயமாய், தத்துவ வழிப்பட்டுத் தத்துவனையடைந்து புலன்பொறியழிந்த புனிதனாகி, சமுத்திரத்தைச்சேர்ந்த நீர்த்திவலைகள், பலநாமரூபங்கள் பெற்றுக் கடைசியில் சமுத்திரத்தைச்சேர்ந்து நாமரூபங்களெல்லாமற்றுத் தங்கினதுபோல், இந்திரியவியாபாரங்

களாம் நீரோட்டங்களும், சங்கற்பவிகற்பமாம் த்வந்தங்களுமற்று, நாமரூபமில்லாதேசனை, அருந்தேசனை நாடி, அவனோடும் நிரதிசயானந்தமென்கிற கைவல்ய ஸம்யோகத்தில் இடையறுதிருந்தேன். ஓம்தத்ஸத்.

ஸத்யானந்தஃ

ஓம் ஸ்ரீ அகண்டானந்த சத்குருவே நமஃ

## * "THAT INTENSEST OF REALITIES, THE HUMAN SOUL."

# ஆத்மதத்துவம்.

அறியாமையிலிருந்து ஆசையுண்டாகிறது. † "ஆசையுண்டானால் அனுபவித்தே தீர வேண்டும்" என்பது ஒரு பாருவிதி. ஆசை யென்றால் விருப்பு; வேண்டும் என்று உள்ளத்திலுதிக்கும் எண்ணம்; குறையுள்ள விடத்துதிக்கும் தேவை யென்னும் எண்ணம்.

"Nature abhors vacuum"—"பிரகிருதி சுத்த சூன்யத்திற்கு இடங்கொடுப்பதில்லை" என்பது எப்படி பௌதிக தத்துவத்தில் உண்மையோ, அப்படி, ஆத்ம தத்துவத்தில், எங்கும் நிறைந்து ஏற்றத் தாழ்ச்சியற்ற பரிபூரண வஸ்துவாம் கடவுளின் அம்சமாகிய ஆத்மா

---

* "There is no ghostly universe, but all intensely real as it exists in that intensest of realities, the Human Soul"—*John Fiske in "Through Nature to God"* quoted by "Now". Compare also the following excerpts from Froebel's *Education of Man*:—

"Parents should view their child in his necessary connection, in his obvious and living relations to the present, past and future development of humanity, in order to bring the education of the child into harmony with the past, present and future requirements of humanity and of the race. For *man*, as such, gifted with divine, earthly and human attributes, should be viewed and *treated as related to God, to nature, and to humanity*; as *comprehending within himself unity* (God), *diversity* (nature), *and individuality* (humanity), *as well as also the present, past and future.*"

"Every individual being if it would attain its destiny—in necessary and indispensable obedience to its nature, must manifest and reveal itself in this triune way—*in and as unity, in and as individuality, in and as manifoldness in ever continuing diversity.*"

"The truth of this conviction is the sole foundation of all insight and knowledge. It is the only test of our conduct. It is the foundation of all religious instruction. The knowledge and application of this truth enables us to recognise nature in its true character, as the writing and book of God, as the revelation of God."

"The knowledge of this truth gives a language to things human as well as to things natural, and imparts true significance and true life to all teaching and learning, to all knowing and doing."

"Only through this conviction life becomes in all its phases and manifestations a self-contained whole, a unit. This knowledge and conviction alone render genuine human education truly possible."

"The knowledge of this truth, the insight into its nature, brings light and life, and, if need be, consolation and support in all circumstances; it alone gives a meaning and a purpose to life."

"Therefore, the truth of the threefold manifestation and revelation of the One God is the corner-stone of the religion which suffices all men in all Zones, and which they have felt, however eagerly, and sought, however unconsciously, for it leads man in the spirit and in truth, in insight and life, to God and in God"—Froebel's *Education of Man.*

"Every human being, as a being proceeding from God, existing through God and living in God" should raise himself to a consciousness of his oneness with God, which *Jesus* attained when he declared "I and My Father are One" and which the *Vedas* teach by the great sayings" "*Aham Brahmasari*", "*Tattvamasi*" &c.

† True Desire leads to its own fulfilment.

நிறைபொருளாந் தன்னில் குறையிருக்க இடங் கொடுப்பதில்லை. மனிதன் எப்போதும் பூரணனாக வேண்டியே, இடைவிடாது முயற்சித்து வருகிறான். இப்படி முயற்சித்தவர், ஆசையென்பது அவன் உள்ளத்திலமைந்த ஒரு தீராத் தூண்டுகோலாயிருக்கிறது. அனுபவமுதிர்ந்த விடத்து ஆசையொழியும். ஆசையொழிந்த விடத்து அநுபவம் விளங்கும். ஆத்ம தத்துவத்தையுள்ளபடி விசாரிக்க மனுஷன் உடலுயிர்ச் சேர்க்கையில் அனேக தத்துவங்கள் கூடிச் சிக்கு முக்கலாய்ப் பிணைபட்டொழுகுவதால் அவைகளை முறையே பிரித்துத் தனித் தனியாயவ்வவற்றினுண்மையை யுணர்வது அந்த வழியில் குருவழிப்பட்டு அப்பியாசித்துத் தேறாதவர்களுக்குக் கஷ்ட சாத்தியமாம். ஆகையால் பிரகிருதியிலுள்ள ஒரு வஸ்துவைக் கொண்டு அதனுண்மையறிந்து தெளிந்தாக்கால், அதைக் கொண்டு (தத்துவம் எல்லாவற்றிலுமொன்றாதலின்,) மனிதனது ஆத்மதத்துவத்தையு மெளிதிலுணரலாம். இப்பொழுது நீர்த்திவலைகளின் தத்துவத்தை ஆதியோடந்தமாய் ஆராய்ந்துணர்ந்த நாம் அவைகள் செய்யும் தத்துவோபதேசத்தால் நாம் அறிந்து கொள்ளவேண்டிய தென்னவெனில்:—இவ்வுலகில் பிறந்துள்ள ஜீவன்களாகிய நாமெல்லோரும் நீர்த்திவலைகளுக் கொப்பானவர்கள். நமது இந்திரிய வியாபாரங்களெல்லாம் நீர்த்திவலைகளாலுண்டாகும் காரியா காரியங்கள். அவை நம்மாலுண்டானாலும், அவற்றிற்கு நாம் அதிகாரியல்ல. "பள்ளத்தில் நீர்தங்கும் பான்மை" போல் ஸத்தியத்தைக் கண்டேயும் சுத்தமாம், ஸாத்விகம் நம்முள் நமக்குரிய தத்துவப்பொருளாக அமைந்துள்ளது. இந்த ஸாத்விகத்தைவிட்டு நாம்வேறு எதைப்பற்றினாலும் அது நமக்குப் புறம்பானதேயாம். பள்ளமுள்ளவிடத்தில்போய்த் தங்கவேண்டியது எப்படி நீரின்தொழிலோ அப்படி ஸத்யமுள்ளவிடத்தில்போய்ச்சேரவேண்டியது நம்முளுள்ள ஸாத்விகத்தின் தொழில். ஸத்யமாவது அழியாதது, ஆசைவற்றது, எங்கும் நிறைந்துள்ளது. ஏற்றத்தாழ்ச்சியற்றது. த்வந்தங்கள் அற்றது. ஏகமாயுள்ளது. நாம ரூபங்களில்லாதது. அதுவே பிரவிர்த்தித்துப் பிரபஞ்சமாய்த் தோற்றும்போது, மூன்றிலொன்றும், ஒன்றில் மூன்றுமாய்த் தோற்றும். அதைப் பொதுப்படச் சொல்லில், ஏகம், **பிரத்யேகம், அனேகம்** என மூன்று வகையாகச் சொல்லலாம். ஏகமாய்த் தோற்றுங்கால் அது கடவுள். பிரத்யேகமாய்த் தோற்றுங்கால் அது சீவன். அனேகமாய்த் தோற்றுங்கால் அது பிரகிருதி மயமாய்த் தோன்றும் வைசுவானரா அல்லது விராட். சீவனாகிய நாம் கடவுளிடத்திருந்து வந்ததால் அங்கேபோய்ச் சேர்ந்தாலே நமக்கு ஓய்வு ஒழிவுண்டாம். சலனமற்றதன்மை அங்கேயேயுண்டாம். வேறு எந்த நிலையிலிருந்தாலும் நித்யத்வமில்லை. கடவுள் நம்மை தன்னை விட்டுப் பிரிக்காமற்பிரித்தனுப்பியதால் பிரத்யேகனாகிய நாம் அவனையே போயடைய, நம்முள் **ஆசை** அல்லது **விருப்பம்** அல்லது **தேவை** யென்கிற ஒரு குறையை யுண்டுபண்ணி யனுப்பியிருக்கிறார். நாம் நிறைவெய்தும் வரையில் இந்தக்குறை பலவிதமாக மாறிமாறித்தோன்றி பள்ளம் ஜலத்தை யிழுப்பதுபோல் நம்மை அதனிடம் இழுத்துக்கொண்டேயிருக்கும். ஆசையை யொழிப்பதாவது பள்ளத்தை நிரப்புவதேயாம். பள்ளம் நிரம்பிப்போனால் நீர் அங்கு தங்காது. ஆசை பூர்த்தியானால் அங்கே நாம் நிமிஷமும் தங்கமாட்டோம். ஆசையொழிந்தால் ஆத்மா ப்ரஹ்மஸ்வரூபனாம். ஆசையையொழிக்க வழியென்னவென்றால், ஆசையைப் பூர்த்திசெய்வதேயாம். ஆசையைப் பூர்த்திசெய்தலாவது அநுபவித்துத் தீர்த்தலேயாம். பள்ளமுள்ளவிடத்து நீர்தங்குவது எப்படி சகஜமோ, அப்படி ஆசையுள்ளவிடத்து ஆத்மா தங்குவது

சகஜம். ஆசை பூர்த்தியானல், அனுபவம் என்கிற நிறைவு உண்டாய் விட்டது. ஆகையால் ஆசையையொழிக்க மருந்து அனுபவஞானமாம். அனுபவ முதிர முதிர ஆத்மாவுக்கு விர்த்தி ‡ ஜாஸ்தி. அதாவது சமுத்திரத்தில் போய்த்தங்கவேண்டுமென்கிற ஆசைஜாஸ்தி. இப்படியாக விர்த்தியும் ஒரு ஆசையேயென்று விளங்குகிறதல்லவா? ஆகையால் வீணுக நாம் த்வந்தங்களைக் கட்டிக்கொண் டழுவேண்டாம். விருப்பு, வெறுப்பு என்றலென்ன? விருப்பே வெறுப்பாகமாறும்; வெறுப்பும் விருப்பாக மாறும், பள்ளமுண்டானல் நீர்தங்கும்: ஒருவிஷயம் மனிதனது புலன்பொறியினல் அவன் ஆத்மாவிற்கெட்ட அதனுடைய உண்மை யவனுக்கு ஸ்வானுபவத்தில் தெரிந்திருந்தால், அதில் ஆசையுண்டாக மாட்டாது. அந்த ஆத்மாவுக்கு அங்கேபள்ளமில்லை. அனுபவஞான மில்லாவிட்டால் அதை யறிந்துகொள்ள ஆசையுண்டாகும். அதாவது அதையறியாமை ஒருகுறையாகப்படும். ஆசையல்லது குறையுள்ள இடத்தில் பள்ளமுண்டு. பள்ளமுள்ள இடத்தில் நீர்தங்கும். அதாவது ஆசையினல் ஆத்மா இழுக்கப்படும்: பெந்தமுண்டாகும். இந்த ஆசையை வாசா வேதாந்திகள் நல்லதென்றும் கெட்டதென்றும் த்வந்தப்படுத்தி வீண் தர்க்கம் விளைக்கிறர்கள். நீருக்குத் தத்துவம் "பள்ளத்தில் தங்குதல்" போல, ஆத்மாவுக்குத் தத்துவம் "ஆசையுள்ளவிடத்தில் அனுபவம்தேடல்." இந்த அனுபவம் பூர்வத்திலுண்டாய், வாசனையாக அடங்கிக் கிடக்கலாம்.§ அப்படியிருந்தால் அந்த ஆசாவிஷயத்தைப்பற்றிச் சிந்திக்க நேர்ந்தால் அங்கு வாசனு ரூபமாயடங்கியுள்ள அனுபவம் சிந்தையிற் கிளம்பி அந்த விஷயத்தின் தத்துவத்தை யுணர்த்தும். தத்துவ முணர்ந்தழி ஆசைவிட்டுப்போம். ஏனெனில் எல்லா அனுபவமும் தத்துவத்தை யுணர்வதற்கே. தத்துவத்தை யுணர்ந்துவிட்டால் அதை யுணரக்காரணமாயிருந்த அனுபவம் காரியமற்று (அதாவது தொழிலற்று) அழிந்துபோகிறது. எழுதப் பேனு அவசியமானுலும் எழுதி முடிந்தால் பேனுவினல் பிரயோஜனமில்லை. விஷயானுபவங்களெல்லாம், விஷயரூபமாகத் தென்படும் ஆத்மதத்துவங்களை யுணர்ந்து கொள்வதற்கான வழிவகைகளன்றி வேறல்ல. விஷயங்களின் தத்துவத்தையுணர்தல் **விவேகம்** எனப்படும். விவேகமுண்டானல் விஷயவாசனை யற்றுப்போம். ¶ விஷயானுபவமின்றி அறிவுண்டாவதில்லையாலும், அறிவின்றி விவேகமில்லையாலும், ஆசையுண்டானவிடத்து அனுபவக்குறைவு தானுகவே யேற்படும். அனுபவக்குறைவு அனுபவித்தாலன்றி நிறைவெய்துவதில்லை. அனுபவமென்றல் ஸ்தூலமாக அனுபவிப்பதையே சொல்கிறர்கள். உண்மையில் தேகம் அனுபவிப்பதில்லை: அது சீவனின்றித் தானுயிருக்கும் வஸ்துவல்ல. சீவனுக்கு அனுபவந் தேடுவதற் கேற்ற கருவியாயமைந்ததன்றிவேறல்ல. ஆகையால் ஆசையும், அறிவும், அனுபவமும் சீவனுக்கேயன்றி (அதாவது கருவிகரணங்களோடு கூடிய ஆத்மனுக்கேயன்றி) கருவிகரணங்களுக்கல்ல. ஒரு கருவியினலாகவேண்டிய கர்மம் கைகூடி விட்டால் அப்புறம் அக்கருவியினுதவி வேண்டியதில்லையே. அப்படியே திரிகரணங்களுக்கும் பொருந்தும். ஆகையால் கருவிகரணங்களோடு கூடிய ஆத்மாவாம் சீவன் மோக்ஷ சாம்பிராஜ்யமெய்த வழியென்னவென்றல் "பள்ளத்தில் நீர்தங்கும் பான்மைபோல்" "உள்ளத்தில் உண்மையையுணர விரும்பும் ஆசையாம்" அழியாத்

‡ ஆத்ம விர்த்தியே பிரபஞ்ச விரக்தியாம்.

§ Stored as tendencies or the essence of past experience in the Sub-conscious mind.

¶ விஷயானுபவம் is what Pestaloazzi calls "immediate perception" or Sense perception which is the basis of all true Knowledge of the world. Without experience there can be no Knowledge.

தத்துவத்தைக் கைப்பற்றி இடையே என்ன நேர்ந்தாலும் என்ன நடந்தாலும், யார் வாழ்ந்தாலும், யார் தாழ்ந்தாலும், "உள்ளத்திலுண்மையை உள்ளபடி யுணரவேண்டும்" என்கிற ஆசையை உறுதியாய்ப்பற்றி "பள்ளத்தில் நீர்தங்கும் பான்மைபோல்" இந்த அழியாத ஆசை பிழைத்தவிடத்துத் துணிந்து தைரியமாய்ச் செல்வதே சீக்கிரத்தில் மோக்ஷசாம்பிராஜ்யத்துக்கின்றியமையாச் சாதனமாம். இந்த ஆசையை உண்மையாக ஒருவன் உள்ளத்திற்பற்றி சதா அதே நினைவாக, அதே தனக்குள்ள ஆத்மதத்துவமாக வெண்ணி, அதன் வழிப்பட்டு நடப்பானானால், அது அவனை எப்படியும் அதிசீக்கிரத்தில் என்று மழியாத வஸ்துவாம் ஸத்யத்திற் கொண்டுபோய்ச்சேர்க்க தத்துவஞானமென்கிற ஆற்றுப்போக்கை யுண்டாக்கிவிடும். அவனுடைய ஆசையதிகரிப்பதற்குத் தக்கபடி துரிதமும், துரித மதிகரிப்பதற்குத் தக்கபடி துணிவும் தைரியமும், தைரியமிகுதிக்குத் தக்கபடி இடரை வெல்லும் சக்தியும், சக்திமிகுதிக்குத் தக்கபடி வேகமாம் தூய்மையும் வாய்மையும், வாய்மை மிகுதிக்குத் தக்கபடி தீவிரமும் பரிபக்குவமும், பரிபக்குவ மிகுதிக்குத் தக்கபடி துரியநிலை சித்தியும், துரியத்திலிருந்தபடி அதையும் கடந்து ஐக்கியமாம் §நித்யசுகசாம்பிராஜ்யமும் கிடைக்கும். இதைவிட்டு அறத்தைக் கூறுபடுத்தி இல்லறம் துறவறமென்று வாதாடிக் கொண்டிருப்பதாற் பயனில்லை.

பின்னுரை.

"சந்ததமும்வேதமொழியாதொன்றுபற்றினது தான்வந்துமுற்றுமெனலால்
சகமீதிருந்தாலுமரணமுண்டெனப்பது சதாநிஷ்டர்நினைவதில்லை
சிந்தையறியார்க்கிதுபோதிப்பதல்லவே செப்பினும்வெகுதர்க்கமாம்"

——ஆதலால் சின்னாள்முன் கைவல்யஸ்வாமியாம் பரதேசியொருவர், முத்தி வேண்டிடில் முன்னே துறதுற வென்று, வெளித்துறவை முதலாக வற்புறுத்தியபொழுது, என்தாய் "எல்லாம் பொய், நீயேசத்தியம், நீயேஉண்மை; அகண்டாகாரமாய், ஆநந்தமாய், அழிவற்றதாய், எங்கும் நிறைந்ததாய், ஏற்றத்தாழ்ச்சியற்றதாய், தானே தானாய், நித்தியமாய், நிர்மலமாய், நிராதாரமாய், ஏகமாய் மனோவாக்குக்கெட்டாததாய், மாசற்றபரஞ்சோதியாய் விளங்கும் அத்வைத வஸ்துநீயே! இதில்சந்தேகமில்லை, சத்தியம், சத்தியம்" என்று தாயன்புமேலிட்டு, உள்ளன்பு நிறைய உளம்பூரித்துக் கருணையங்கண்ணால் கார்முகிலொப்பக் கனமழைபொழிந்து சொல்லிய வாக்கை, உள்ளங்குழைந்து, உளம் நெக்குவிட்டுருக, அன்பு நிறைந்தென்புருகி, உடல் பொருளாவியையும் ஒருங்கே தத்தம்செய்து உள்ளத்திற் பதிய வைத்துக் கொண்டுய்யமாட்டாது, "செம்மைநலமறியாச் சிதடரொடுங்" கூடிப்

"புறமேதிரிந்தேனைப் பொற்கழல்சூட்டி
நிறமேபுகுந்தென்னை நின்மலனாக்கி
யறமேபுகுந்தெனக் காரமுதீந்த
திறமேதென்றெண்ணித்திகைத்திருந்தேனே."

---

§ இதையே, சாயுஜ்யம், கைவல்யம், முத்தி, யெனப் பலவிதமாய்ச் சொல்வார்கள்: ஜீவன் தேகத்திலிருக்கையிலேயே இந்நிலையடைந்தோர் 'ஜீவன் முத்தர்' எனப்படுவார்கள்.

" திருவடிஞானம்சிவமாக்குவிக்கும்
திருவடிஞானம்சிவலோகம் சேர்க்கும்
திருவடிஞானம்சிறைமலமீட்கும்
திருவடிஞானமேதிண்சித்திமுத்தியே"—திருமந்திரம்

# TRUTH OFTEN UNWELCOME AT FIRST.

[A Translation of the Extract in the August No. of the Vivekachintamani.]

# உண்மை முதலில் ஒருவர்க்கும் பிடியாது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

1. மருவிய வயாவிற் கால மிடையற வருந்தா நிற்கும்,
ஒருவறக் கடிகை தோறு முதித்தலா லொவ்வோ ருண்மை;
தருமதி நிறைபு முன்னந் தாய்வயிற் றுதித்த சேய்போல்,
உருவது குறைந்து தோன்று முதித்தவவ் வுண்மை மாதோ.

(இ-ள்.) ஒவ்வொரு நாழிகையும் யாதேனும் ஒருண்மை உலகில் தோன்றிக்கொண்டே யிருத்தலினலே, அது தோன்றுதற்கிடனுகிய காலமென்னும் நங்கைக்குப் பிரசவ வேதனை நீங்குவதேயில்லை. அவ்வுண்மையானது பிறக்கும்போது எவ்வாறு தோன்றுமென்னில், பத்துமாதமும் பூர்த்தியாகிக் கருப்பம் பரிபூரணமாகு முன்னமே குறைமாதத்தில் பிறந்த குழந்தைபோல, மகா அவலட்சணமாகத் தோன்றுமேயன்றி, இனிமையாகத் தோன்றுவதில்லை.

2. தாய்மடிச் சுருண்டு தங்குஞ் சருப்பமொன் றதனை யேய்ப்பத்,
தீயவவ் வுருவங் கண்டு, சிந்தையி லயர்ந்து, மற்றி
தேயகங் குலத்துக் கீன மிழைக்கவர் துற்ற தாய
மாயமொன் றென்ன வஞ்சி மாழ்குவர் மனத்து மாதோ.

(இ-ள்). அன்றியும், ஒருவர்க்கு நல்லவடிவுடையகுழந்தைபிறத்தற்கு மாருகச், சர்ப்பம்போலக் கோரரூபமொன்று பிறந்து தாயின்மடியிற் சுருண்டுகிடக்கக்காணின், அஞ்சி, உறவினர்யாரும், ஐயோ நம குலத்துக்குத் தீராக்குறையும் அவமானமும் உண்டுபண்ண இந்தக்கோரம் என்வந்து பிறந்ததென்று, மனம் வருந்துதல்போல, இவ்வுண்மையைக்கண்டு அஞ்சி வருந்துவார்கள்.

3. சிலரதைக் கழுத்து நைபத் திருகுமினென்பர், சில்லோர்
குலைவுற வுணவிடாது கொல்லுமி னென்ப ரேனும்,
நலிவற வுயிர்த்து நின்று, நவில்பல கரத்து மாறி,
முலைபல செவிலி யூட்ட முசிப்பற வளருமன்றே.

(இ-ள்). சிலர் அதனைக்கழுத்தைத் திருகிக்கொன்று விடுங்கள் என்பார்கள். வேறு சிலர் ஆகாரம்போடாமல் பட்டினி போட்டுக் கொல்லுங்கள் என்பார்கள். ஆயினும், அவ்வுண்மையென்னும் குழந்தையானது, வல்லுயிர் பெறுதலின், இத்தனைக்கும் மடியாமல், உயிர்பெற்றிருந்து, பல கை மாறி, அநேக செவிலித்தாய்களின் முலைப்பாலுண்டு, சிறிதும் தளர்ச்சியில்லாமல் வளர்ந்துவரும்.

4. வரவர வளர்ந்து மேனி வடிவுற நிறைந்த தாகி,
வெருவுறு முடல மெல்ல விளங்கிநல் லழகு தோன்ற,
மருவிய பீரந் தண் மேனி மறைந்துநல் வனப்புவாய்ந்து,
திருமலி தெய்வ மென்னத் திகழ்ந்திடுஞ் சிறப்பி னன்றே.

(இ-ள்). அவ்வாறு நாளுக்குநாள் வளர்ந்து, உருவத்திலும் வடிவத்திலும் நிறைவடைந்து, முன் கண்டோர் அஞ்சிய அருவெறுப்பான தேகமானது விளக்கமுற்று அழகுதோன்ற, முன்னிருந்த பாம்பைப் போன்ற கொடிய மேனியானது மாறிமறைந்து அழகு வாய்ந்து, தெய்வமேனிபெற்று, ஓர் அழகிய தெய்வம்போல விளங்காநிற்கும் அவ்வுண்மை.

5. பற்றநாட் பிறந்த காலை வைதறப் பழித்தோர் யாரும்,
முற்றிய மகிழ்ச்சி யோடு முனிவற வெதிர்கொண் டேகிப்,
பற்றரும் பாந்த ளென்னப் பயந்தெறிந் துதறுங் கையால்
உற்றுறத் தழுவி யோம்ப வுபருமவ் வுண்மை தானே.

(இ-ள்.) அப்போது, முன்தான் பிறந்த காலத்துத் தன்னை வைது நிந்தித்தோர் யாரும் மிகுந்த மகிழ்ச்சியோடும் எதிர்கொண்டழைத்து, முன்னம் பாம்பென்று நடுங்கித் தொட்டவுடனே எறிந் துதறிய கைகளால் உடல் புளகிக்கத்தழுவி உபசரிக்க, பெருஞ்சிறப்புடையும் அந்த உண்மை.

எஸ். முத்து ஐயர், பி. ஏ.

---

THE ILIAD OF HOMER.

ஹோமர் என்னும் மகாகவிபாடிய

# இலியயுத்தம்.

## முதற்காண்டம்.

(115-வது பக்கத் தொடர்ச்சி.)

அகமம்னனுக்கும் அக்கிலனுக்கும் பிணக்கம்.

53. நின்பணி கேட்கவு நேர்ந்த தெனக்கென்
துன்பு தராய ரெனக்கெது சூழ்ந்தார்
என்பதிமேற் பொர வெய்திலரன்னார்
இன்பி னிருந்தனன் யானவ னன்றே.

(இ-ள்.) உன் சொற்படிகேட்டு உனக்குத்தொண்டு செய்திருக்க எனக்குவந்த நிர்ப்பந்த மென்ன? தராயரோடு இங்குவந்து யுத்தஞ்செய்ய அவர்கள் எனக்குச்செய்த தீங்கொன்றும் இல்லை. அவர்கள் என்னுட்டின் மேற் படையெடுத்து என்னோடு சண்டைக்குவந்ததில்லை. நான்பகைவர்பயமின்றி நிர்ப்பயனைச்சுகித்து வாழ்ந்திருந்தேன். இவ்வளவுபாடும் உன்பொருட்டேயன்றி வேறில்லை.

54. வார்கடலும் வரை யும்மரணுகி
நீர்வளமல்கு மெனுட்டி னெருங்கும்
சீர்மலி செல்வ முவந்து நுகர்ந்து
போர்வலியேங்களி பொங்கி யிருந்தேம்.

(இ-ள்.) கடலையும் மலையையும் காவலாகப்பெற்றுச் சத்துருபயமில்லாதாகி நீர்வளம் நிறைந்து செழித்த என் ராஜ்யத்தில் அநேக சிறந்த செல்வங்களைப்பெற்றுச் சுகித்து எங்களை வெல்லவல்லர் ஒருவருமில்லாத பராக்கிரமத்தைப்பெற்று மகிழ்ந்திருந்தோம்.

55. ஈங்குறவெம் மொடு மேனை நிலத்தார்
தேங்குதண்வேலை திரண்டென மொய்த்த
தோங்கலிலுன்ற னுடும்பி தனக்கும்
ஆங்குறுதீங்கை யகற்றிடவன்றே.

(இ-ள்.) நாங்களும் எங்களோடு மற்றத்தேயத்தார்களும் இத்தாய் நகருக்குத்தத்தம் சேனைகளோடு கடல்போலத் திரண்டுவந்துகூடியது உயர்ச்சியில்லாத சிறுமைக்குணங்களையுடைய உனக்கும் உன் தம்பி யெனிலயனிக்கும் நேர்ந்த பழியை நீக்குதற்கன்றோ.?

56. நன்றியிலாயுனை நாநெடு நாளா
ஒன்றிவருந்தி யுழன் றுறு போரிற்
சென் றுடல் செம்புனல் சிந்திய தெல்லாம்
இன்றிவணிங்ங னிகழ்வுறு தற்கோ.

(இ-ள்.) செய்ந்நன்றி யுணராத சிறுமதியுடையோனே, உன்னை நாங்களெல்லாம் நெடுநாளாகத் தொடர்ந்து அநேகவருத்தங்களில் அடிபட்டுப் போர்க்களத்தும் புகுந்து பொருது வெட்டுண்டு உதிரம் சிந்திப் பட்ட பாடுகள் அனைத்தும் இப்போது உன்னால் இவ்வாறு அவமதிக்கப்படுதற்கோ? நாங்கள் அடைந்த பிரதி பிரயோசனம் நன்றாயிருக்கின்றது.!

57. உற்றதுயர்க்கள வின்றுரி மைத்தாய்ப்
பெற்றது பேசுகி னெட்டுணையில்லை
மற்றது வுங்கொள வன்புசெய்வாயோ
எற்றிது சொற்றனை யேதமிகுந்தாய்.

(இ-ள்.) நாங்கள் உன்னையண்டி அடைந்ததுன்பங்களுக் கெல்லையில்லை. அவற்றிற்குமாறாகப் பெற்றபயனோ எள்ளினும் அற்பமாகும். அவ்வற்பத்தையும் நீ பறித்துக்கொள்ள வன்புசெய்கின்றாய். கெடுமதியுடையோனே என்னவார்த்தைகளைச் சொன்னாய் நீ!

58. பட்டபல்பாடு முழற்சியும் யானே
முட்டவரும் பயன் முற்றினை நீயே
கெட்டது போது மினித்தொடர் கில்லேன்
விட்டினி மீளுவ னென் னகருக்கே.

(இ-ள்.) அநேகபாடுபட்டுப் பகைவரோடு பொருதுழன்றவன்நான். அதன்பிரயோசனங்கள் யாவும் பெற்றவன் நீ. போதும் போதும் இந்தக் கூட்டு வியாபாரம். இனி உன்னை ஒருநாளும் தொடர மாட்டேன். என்பாட்டுக்கு என்னகரை நோக்கித்திரும்பிச் செல்லுகின்றேன்.

வேறு.

59. இனையன வுரைத்தல்கேட்ட விறைமகன் முனிந்து சொல்வான்
வனைகழல் வீரவின்னே யேகுக வழங்கு நின்றன்
தனிநெடுந் துணையும் வேண்டேன் சாற்றிய வுரையுமஞ்சேன்
நனியெனைத்தொடர்ந்து வன்போர் நயந்திடப் பலருமுண்டே.

(இ-ள்.) இவ்வாறு கூறிய அக்கிலன் வார்த்தைகளைக்கேட்டு அகமமன்னன் கோபாதீதனாய்க்கூறுகின்றான். ஓவீரனே! வேண்டுமாயின் இந்தக்ஷணமேசெல்லுக. அதிகமாகப்பயமுறுத்தாதே. உன்னுடைய உதவியும் வேண்டா மெனக்கு. உன்பயமுறுத்தலுக்கும் பயப்படேன். நீயொருவன் போய்விட்டதனாலே என் காரியம் குறைவுறாது எனக்காகப்போர்செய்ய வுடன்படும்வீரர்கள் இன்னம் அநேகர் இருக்கின்றார்கள்.

60. வேந்தனாமெனக்குநேர்ந்த வெம்பகை வென்றுமாற்றிப்
போந்ததோர்பழியை நீக்கப் புனிதனாம் யோவும் போதும்
தேந்தொடை யரசர்கூட்டத் துன்னைநேர் செருக்குமேவி
வந்தலா மென்னையிங்ஙன் வெறுப்பவரில்லை மாதோ.

(இ-ள்.) சார்வபௌமனாகிய எனக்கு விளைந்த பகைவர்களைச்செயித்து நிக்கிரகித்து என் குறையை நீக்குதற்கு முதற்கடவுளாகிய யோவும் துணைநிற்பன். நீயொருவன் என்னைக்கைவிட்டதனால் எனக்கோர் குறைவும் உண்டாகாது. அன்றியும் எனக்குத் துணைவந்திருக்கும் அரசர் கூட்டத்தில் உன்னைப்போலக் கருவபுஞ்சராய் என்னை இவ்வாறு வெறுப்பவரும் ஒருவரும் இரார்? நீ செல்லுதலால் எனக்குச் சிறிதும் விசனமில்லை.

61. பகையொடு குதர்க்கமல்லாற் பார்த்திலேன் பிறிதொன்றுன்பால்
தகையறக்கொலைசெய் வெய்ய சமரலால் விழைந்தாயில்லை
மிகைபடுவலியுமேனை வீண நீபடைத்தயாவும்
அகமகிழ்ந்தமலன்றன்பா லருளென லயிர்த்தாய் போலும்.

(இ-ள்.) உன்னிடத்தில் சதா விரோதமும் விதண்டாவாதமும் அல்லாமல் வேறொன்றும் நான் கண்டதில்லை. உனக்குச் சதா சண்டையும் கொலையுமன்றி வேறே இச்சையுமில்லை. வீணர்க்கெல்லாம் வீணனே நீ படைத்திருக்கும் வலியும் பெருமையும் யாவும் தற்பரன் அருளால் தந்தவைகளேயன்றி நீயாகப் பெற்றவைகளல்ல வென்பதையும் முற்றும் மறந்து விட்டாய்போலும். பேதாய் நீயோ நன்றிகெட்டவன் நானோ நன்றிகெட்டவன்?

62. இறக்குக கலங்களாழி யேகுக வின்னேயேநீ
பெறற்குறு புவியைச்செங்கோல் பிழைத்திடப் புரந்துவாழ்நின்
உறத்தரு முதவிவேண்டேன் உரைதரு நிமித்தமில்லா
வெறுப்புநன்னிலையில் கேண்மை விளைவுமொன்றென்ன வோர்ந்தேன்!

(இ-ள்.) நீ யுன்கப்பல்களைக்கடலில் இறக்கி உன்தமர்களோடும் இந்தக்கணமே செல்லுக. உன்னாட்டிற்சென்று கொடுங்கோல் செலுத்திச் சனங்களையொறுத்து ஆண்டுகொண்டிருப்பாயாக. உன்னுடைய உதவி எனக்குச் சர்வதாவேண்டாம். ஒருகாரணமுமில்லாமல் நீ என்னை வெறுக்கும் வெறுப்பும், க்ஷணச்சித்தம் க்ஷணப்பித்தம் என்றபடி நிலையில்லாத உன்சிநேகமும் இரண்டும் ஒருப்போலப் பயனற்றதே யென்றுணர்ந்தேன்.

63. வெருட்டுக நினைத்தாழ்ந்துள்ள வென்றியில் வீரர்தம்மை
இருட்டுறுமதியாயென்முன் வெருளனின் கடனதாகும்
அருட்டிருக் கடவுள்யான்கொள் எரிவையை யனுப்பவேண்டின்
பொருட்டிணிகலத்தினேற்றிப் போக்குவன் புந்திகூர்ந்தே.

(இ-ள்.) உன்னடியில் வீழ்ந்துன் பணிவிடையில் நிற்கின்ற வெற்றியில்லாது வீரரென்று பெயர் வைத்துக் கொண்டிருப்பவர்களை வேண்டியபடிவெருட்டுவதேயன்றி, புத்திகெட்டமூடா, எனக்கு முன்னே நீயன்றோ அஞ்சியிருத்தல் முறைமையாகும். அருள் நிரம்பிய கதிர்க்கடவுள் நான் சிறைப்படுத்திய கன்னிகையைத்திரும்ப அனுப்ப ஆக்ஞாபித்தால் அப்படியே அவளை அநேகம் பொருள்களோடு கப்பலேற்றி மனமகிழ்ந்து அனுப்பாநிற்பேன்.

64. தெரிந்திடுபின்னர் நீகொள் சேயிழை பிரசை யென்னும்
முருந்திளமூரலாளை மொய்ம்பினுற் கொள்வேனீயே
தருந்திறனிலையே யாகிற் றனேவேன் மானவேந்தென்
அருந்திறல் சிறிது நீயு மறிந்திடக் காட்டுவேனே.

(இ-ள்.) பின்பு நீவைத்துக் கொண்டிருக்கும் பிரசையென்னும் பெண்ணை நீயாகத் தந்தாலாயிற்று; இல்லாவிடில் உன்னிடத்திலிருந்து கவர்ந்து கொள்ளுதற்கு எனக்குச் சத்தியுண்டு. மகாசேனைகளுக்கெல்லாம் அதிபதியாகப்பெற்ற பெருமைமிக்க அரசனாகிய எனதுபராக்கிரமத்தை நீயும் சிறிது தெரிந்துகொள்ளும்படிக்காட்டுவேன். இதை நீ அறிவாயாக.

65. நாணமுந் துயருங்கொண்டு நவையுறத் தோற்று நீயும்
ஏனுறு தோளினேனை யெதிர்த்ததை நினைந்துபீழை
பூணவும் புடைசூழ்ந்தோர்கள் புரவலர் தேவர்க்கல்லால்
மாணுறு மொய்ம்பு சாயா வண்ணமு மறியவன்றே.

(இ-ள்.) நீ என்னேடெதிர்த்துத் தோல்வியடைந்து அதனல் வெட்கமும் துக்கமுமடைந்து ஐயோ இவன் பெருமையும் வலிமையும் கருதாமல் எனிவனை எதிர்த்தோமென்று பச்சாத்தாபப்படவும் நம்மைச்சூழ்ந்து நின்றவர்கள் அனைவரும், என்போலும் சார்வபௌமர்களாகிய வேந்தர்கள் தேவர்களுக்கு ஒருவேளை வலி சாய்வார்களேயன்றி மற்றவர்களுக்குத் தோல்வியடையார்களென்னும் உண்மையை அறியவும் என் பராகிரமத்தைக் காட்டுவேன்பார் என்றனன்.

(தொடரும்)

எஸ். முத்து ஐயர், பி. எ.

## KINDERGARTEN PRINCIPLES.

## கிண்டர்கார்டன் போதனுமுறைக் கொள்கைகள்.

நாளது ஸெப்டெம்பர்மீ 12வ. சனிக்கிழமை யன்று சாயங்காலம் 3-மணி முதல் 6-மணிவரையில் சைதாப்பேட்டை டீச்சர்ஸ் காலேஜில், கிண்டர் கார்டன் போதனுமுறையை யனுசரித்துச் சிறுவர்க்குப் போதிக்கும் முறை விளக்கிக் காட்டப்பட்டது. மிஸ்ஸஸ் கோர்ட்ரைட் என்னும் அமெரிக்கா தேசத்து வித்யாபோதகர் மேற்பார்வையில் பழக்கப்பட்ட சிறுவர்கள் சிறுமிகள் அன்று டீச்சர்ஸ் காலேஜிற்குக் கொண்டு வரப்பட்டு, அவர்கள் கற்ற வித்தைகளைக் காட்டினர்கள். இவர்களெல்லாரும் சென்னையில் கர்னல் ஆல்காட் ஸ்தாபித்த பஞ்சம தர்மபாடசாலைகளில் படிக்கும் குழந்தைகள். இவர்களுக்குப் போதிக்கும் உபாத்தியாயர்களும் அக்குலத்தவர்களே. சொற்பப் படிப்புப்படித்து அற்பசம்பளத்துக்குழைப்பவர்கள். இவர்கள் ப்ரைமெரிபரீக்ஷை கொடுத்தவர்கள்: அதற்குமேல் படிப்பு இல்லை. இவ்வளவு சொற்பப்படிப்புள்ள உபாத்திமார்களைக் கொண்டு ஸ்வபாவமாகப் புத்தி விசேஷத்துக்குப் பேர் போனவர்களல்லாத கீழ்ச்சாதிப்பிள்ளைகளுக்கு ப்ரோபெல் என்னும் பேர்போன வித்யா போதனுசிரியருடைய அதிமேலான கொள்கைகளை யனுசரித்து வித்யாப்பியாசம்செய்து வைத்தது மிஸ்ஸஸ் கோர்ட்ரைட் துரைசானியின் உழைப்பையும், விடாமுயற்சியையும் திரத்தையும் நன்கு விளக்குவதாயிருந்தது. உபாத்தியாயர்களுக்கு இங்கிலீஷ் நன்ருகத்தெரியாது. சுபரின்டெண்டெண்டு துரைசானிக்கோ தமிழ் ஒருவார்த்தையும் தெரியாது. இப்படி யிருக்கையில், அந்த உபாத்தியாயர்களுக்கு கிண்டர்கார்டன் முறையையனுசரித்துக் குழந்தைகளுக்குப் போதிக்கும் முறையைக்கற்பித்து அவர்களைக் கொண்டு அச்சிறுவர் சிறுமிகளை அவ்வளவு நன்ருகப் பழக்குவித்தது மிகவும் கொண்டாடப் படத்தக்கதே. அத்தருணம் அக்கிராசனதிபதியாயிருந்த மிஸ்டர் ஜெ. எச். ஸ்டோன் அவர்கள் இதை நன்குமதித்து அவர்கள் முயற்சியைச் சிலாகித்துப் பேசினது மிகவும் சரியானதே. சிறுவர்கள், கும்மி கோலாட்டம், அபிநயம், ஆட்டபாட்டம் முதலிய விளையாட்டுகளில் நன்கு பழகினவர்களாகக் காட்டினர்கள். அன்றி போதனுமுறையும் விஷயஞானமின்றி வார்த்தைகளைமட்டும் பொட்டைப்பாடம் செய்யும் குருட்டு மார்க்கத்தைக் கைப்பற்ருமல், குழந்தைகள் உச்சரிக்கும் சப்தத்துக்குரிய பொருள்களை யுணர்ந்து, விஷயங்களுக்கும் வார்த்தைகளுக்கு முரிய சம்பந்தத்தை நன்ருயறிந்தவர்களாகக் காட்டினர்கள், ஓலையினுல் கூந்தல், கிளி, தாமரைப்பூ, தட்டு பொட்டி, கிலு கிலுப்பை, கிறுச்சட்டி, ஊதுகுழல், முதலிய அனேக வேடிக்கை விளையாட்டு வஸ்துக்களும் அச்சிறுவர்கள் தாமே செய்து காட்டினர்கள். இப்பேர்ப்பட்ட விளையாட்டு வஸ்துக்களைச் செய்ததற்காக இதை யெழுதுபவரும் அவரையொத்த குழந்தைகளும் 30-வருஷங்களுக்கு முன்பெற்ருேரால் கண்டனை தண்டனைக்குள்ளானது இன்னும் அவர் ஞாபகத்திலிருக்கிறது. குழந்தைகள் ஸ்வபாவமாய் உபாத்தியாயர் உதவியின்றி தன்முயற்சியாய்க் கற்று விளையாடிய விளையாட்டுகளை விஷயங்களாகப் பாவித்துக் கண்டனை தண்டனைகள் செய்து அவ்வழக்கம் அனேகமாக அற்றுப்போனபின், இப்பொழுது அவ்வழக்கங்களையே உன்னதமான வித்யா போதனு முறைப்படி சிறுவர்க்கு உண்மையில் நன்மை பயக்கும் வித்யாப்பியாசங்களாக அமெரிக்கா தேசத்திலிருந்துவந்த உண்மையான ஒரு கிண்டர் கார்டன் போதனுசிரியரின் அபார முயற்சியால் வித்யா அதிகாரிகள் ஒப்புக்கொள்ளும் படியான காலம் வந்திருக்கிறது. இதனுல் ஆள்வோருக்கும் ஆளப்படுவோருக்குமுள்ள வித்யாசத்தால் உண்டாகும் தீங்கு நன்கு புலப்படும். இது நிற்க.

இப்பொழுது கிண்டர்கார்டன் போதனுமுறை யென்ருலென்னவென்று சற்றுவிசாரிப்போம். நம்மையாளும் அங்கிலேயருக்கு நமது ஆசார அனுஷ்டானங்களும், நமது முன்னேர்களது ஆத்ம வித்யா முறையும் உண்மையில் ஒன்றுந் தெரியாமையால் அவர்கள் எல்லாவற்றையும் ஆழ்ந்து ஊன்றிப் பார்க்காமல், மேற் பார்வையாகப்பார்த்து அவைகளிலுள்ள குற்றங்களையே கிரகித்துக் குணங்களையறியாமல் கண்டிக்க நேரிட்டிருக்கிறது. நம்மவர்களும், அவர்கள் வழிப்பட்டு நமது பழக்க வழக்கங்களின் உண்மையையுள்ளபடி யாய்ந்துணராமல், நமது முன்னேர்

ஏற்படுத்திய மேலான உண்மைக் கொள்கைகளை மறந்து அவற்றின் அனுசரணையை அடியோடு விட்டுவிட்டார்கள். இப்பொழுது "கிண்டர்கார்டன் போதனுமுறை" அதிமேலானது என்று மேற்குத்திசையார் சொல்வதைக்கேட்டு, அதை யனுசரிக்கத் தொடங்கி யிருக்கிறார்கள். அனேகர் "கிண்டர்கார்டன் முறை" யென்றால் என்னவோ அது புதுச்சரக்கு கப்பலிலிருந்து இறக்கப்பட்டது என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். வெள்ளைக்காரர்கள், நமது ஆரியமதக் கொள்கைகளையும் அனுஷ்டானங்களையும் அறியாமல், கிண்டர்கார்டன் முறையைக் கொண்டாடுவது சகஜம். ஆனால் உண்மையில் கற்றுத்தேறிய ஹிந்துக்கள் அப்படி மயங்கக்காரணமில்லை. ஏனெனில் ப்ரோபெல் என்பவர் கண்டுபிடித்த இப்போதனுமுறை உண்மையில் தத்துவ சாஸ்திரத்தை யொட்டினதாயிருப்பதால், தத்துவ ஞானத்தில் பேர்போன நம் பூர்வீக இருடிகள் ஆத்ம வித்யாபோதமாகச் சொல்லியுள்ள தத்துவங்களையே அவரும் கண்டு அதனுண்மையை விளக்கியிருக்கிறார்.

தத்துவ வழிப்பட்டுக் குழந்தைகளுக்குக்கருவி கரணங்கள் விர்த்தியாகவும் ஆத்ம விலாசம் விளங்கவும் வித்யாபோதனை செய்வதே, கிண்டர்கார்டன் முறையாம். மனிதன் (Man) என்கிற பதத்துக்கு ப்ரோபெல் தத்துவக்கொள்கைப்படி ஆத்மன் என்கிற வார்த்தையினால் நம்முன்னோர் தெரிவித்த கருத்தே பொருந்துவதாயிருக்கிறது. "ஒரு குழந்தையினிடத்தில் திரிகாலஞானமும் திரிவிதத்தோற்றமும் பொருந்தியிருப்பதால், அம்மூன்றும் விர்த்தியாய் விளங்கும்படி பெற்றோர் அக்குழந்தையை வளர்த்துவரல்வேண்டும்" என்று வற்புறுத்திக் கூறுகிறார். மனிதனிடத்தில் தெய்வீகம், மானுஷீகம், பௌதிகம் என்கிற மூன்றுதத்துவங்களும் ஒருங்கு பொருந்தியிருப்பதால் இம்மூன்றும் பூரணமாய் விளங்க அவனை விர்த்திக்குக் கொண்டுவரவேண்டுவது வித்யாபோதனையின் நோக்கமாக விருக்கவேண்டுமென்று சொல்கிறார். உலகத்திலுள்ள பிரத்யேகஜீவன் ஒவ்வொன்றும் அதன் ஸ்வபாவப்படி விர்த்தியடைந்து பூரணமாய் விளங்கவேண்டுமானால், எல்லா வஸ்துக்களுக்கு மியல்பாயுள்ள, திரிவிதகுணங்களையும் அது பூர்த்தியாக அமையப் பெற்றிருக்கவேண்டுமென்கிறார். அந்த த்ரிவிதகுணங்களும் த்ரிவிதத் தோற்றமாக விளங்கும். அது எப்படி யென்றால், எதுவும் "மூன்றிலொன்றும் ஒன்றில் மூன்றுமாக" விளங்கவேண்டும். உதாரணமாக மனிதனிடத்தில் தெய்வீக, மானுஷீக, பௌதிக தத்துவங்கள் மூன்றும், ஏகம், பிர்த்யேகம், அனேகம் என்கிற மூன்று விதத்தில் விளங்கவேண்டும்; ஏகமாய் விளங்கும் பொருள் கடவுள்: பிரத்யேகமாக விளங்குங்கால் அது மனுஷஜீவன்; அனேகமாய் விளங்குங்கால் அது பிரகிருதி யென்று சொல்லப்படும். இவர் ஏகதத்துவமாகச் சொல்வதை நம்மவர் ப்ரஹ்மம், ஏகன், கடவுள், என்று பலநாமங்களால் சொல்லியிருக்கிறார்கள். நாமரூபமில்லாத அகண்டமான ஏகவஸ்துவை எத்தனை பேரிட்டழைத்தாலும், ஊன்றிப்பார்க்குங்கால் அது அந்த ஒன்றையே விளக்கும்; பிரத்யேகமாக விளங்கும் மானுஷீக தத்துவத்தை நமது முன்னோர் பிர்த்யகாத்மன் என்றும் வேறுவிதமாகவும் சொல்லியிருக்கிறார்கள். அனேகமாக விளங்கும் பிரகிருதி தத்துவத்தை, விராட் என்றும், வைசுவானரா என்றும் ஸ்தூலசூக்ஷ்மார்த்தம்பற்றி வெவ்வேறு பேர்களால் குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்த மூன்றையும் ஒன்றாகவறிந்து; ஒன்றாக வறிந்ததையே பிந்தி மூன்றாக விளங்கப்பார்ப்பது உண்மையான வித்தையின் முடிவு நோக்கமாம் என்று ப்ரோபெல் சொல்லியிருக்கிறார். அதாவது, மனுஷன் சீவனாகக் கருவி கரணங்களை விர்த்திசெய்து, ஆத்மனாக ஈசுவரதத்துவத்தோ டைக்கியமாகி, அதையுங்கடந்து ப்ரஹ்ம ஸ்வரூபமாகி தானே தானாய் விளங்கி, மறுபடியும் அந்த ப்ரஹ்மஸ்வரூபமே, ஈசுவரதத்துவமாய் ப்ரகிருதியாக விளங்குகிறதென்றும், அந்தப் பிரகிருதியினுட்பட்டதே மனுஷதத்துவமாம் சீவனென்றும் அறியவேண்டுமென்றாகிறது. ஸ்ரீமத் இராமகிர்ஷ்ணபரமஹம்ஸர், மனுஷன் தான் வந்தவழியே பின்வாங்கி ப்ரஹ்மத்தில் ஐக்கியமாகிப், பிறகு ப்ரஹ்மஸ்வரூபத்திலிருந்து வெளியாகி மனுஷனாய் இருந்தவிடம் வந்து சேருவது ஆத்மானுபவப் பூர்த்தியாமென்று செப்பியுளார். இரண்டுக்குமுள்ள வித்யாசம் ஒன்றுமில்லை. உண்மையனுபவமின்றி வார்த்தை மட்டில்வாசித்து, வாசாஞானம் பேசுகிறவர்கள், ஒன்றை யொன்றாக மருளினால்கொண்டு மனங்குழம்பி வீண் தர்க்கம் விளைத்து விதண்டாவாதம்

செய்வார்கள், உண்மையில், ஸ்வானுபவ முள்ளவர் தத்துவஞானம் எப்படிச்செப்பினும் உண்மையே யென்று உள்ளபடி யறிந்துகொள்வார்கள்.

இப்பொழுது இந்தமுறைப்படி குழந்தைகளுக்குப் போதிக்க முதலில் இன்றியமையாதவசியமானது—விஷயஞானமாம். இதை பேஸ்ட்லோஜி யென்னும் இன்னொருபேர்போன வித்யாபோதகாசிரியர் "immediate perception" என்று சொல்லி, இதுவே எல்லா அறிவுக்கும் ஆதாரம் என்று வற்புறுத்தியிருக்கிறார். ப்ரோபெல் இதையொப்புக்கொண்டு விஷய ஞானத்தால் அறிவுண்டாவது உண்மையாயினும், இந்த அறிவுக்கும்மேலான உள்ளறிவு ஒன்றிருக்கிறதென்றும், அதுவிர்த்தியாய் விளங்கினுல்தான் ஆத்ம ஞானமுண்டாமென்றும் சொல்லி, விஷய ஞானத்தி லாரம்பித்து அதனுலுண்டான அறிவு முதிர தத்துவஞானமும் விர்த்தியாய்வரவேண்டு மென்றும், தத்துவஞானமின்றி ஆத்மஞானமும், ஏகமாயுள்ள அத்வைத வஸ்துவையுணரும் சக்தியு முண்டாகாதென்றும், ஆகையால், பொறிபுலன்களின், அதாவது கருவிகாணங்களின் விர்த்தியோடு இவைகளுக்கெல்லாம் ஆதாரமாயிருக்கும் உள்ளத்துணர்வாம் ஆத்ம சக்தியும் விர்த்தியாக வேண்டு மென்று சொல்கிறார். இதுசத்தியமே. இப்படிப் புலன்பொறியுணர்வும் உள்ளத்துணர்வும் விர்த்தியாக, பிரகிருதி வஸ்துக்கள் எதையும், புலன்பொறி, கருவிகாணங்களால் தீண்டிப்பழகி யறிந்துகொள்வதோடு, அவையொவ்வொன்றிலும் மறைந்து கிடந்து எங்கும் வியாபியாநின்ற ஈசுவர சக்தியை விளக்கும் தத்துவத்தையு முணரவேண்டு மென்றும், இந்த உணர்ச்சி, உள்ளத்துணர்வால் உண்டாகவேண்டுமேயன்றி, புலன்பொறி கருவிகாணங்களால் சித்திப்பதல்லவென்றும் சொல்கிறார். இப்படியறியவேண்டிய அறிவு எல்லாவற்றிற்கும் பொதுவாயுள்ள ஒரு உண்மைத்தத்துவத்தை அவர்நன்ருக வெடுத்து வற்புறுத்தியிருக்கிறார். அவருடைய மஹாவாக்கியம் என்னவென்றால் "inner connection" அதாவது "உள்ளறிவு." "உள்ளறிவு" உண்டாக மனேலயம் அவசியம்; இதை ஆத்மவித்தையில் லயயோகம் என்று சொல்வார்கள். அதாவது ஒருபொருளை லக்ஷியமாகக் கொண்டு, மனது அது ஒன்றையேபற்றி அதோடு ஒன்றுபட்டு நசித்துப்போவதாம். இப்படி மனேலய மானுல்தான் "உள்ளறிவு" உண்டாகும். இப்படி உண்டாகும் உள்ளறிவுக்கு அழிவில்லை. மற்ற அறிவு எல்லாம் நிலைத்திருக்காது. இந்த வுண்மையையறிந்து நடப்பது கஷ்டமாயிருந்தாலும் சுபாவத்தில் அறிவுவிர்த்தியாவது இதனுலேயே. ஒரு வஸ்துவை நாம் உட்கொண்டு சீரணம் செய்யும் முறையையறிவது கஷ்டமாயிருக்கலாம். ஆனுல் அவ்வஸ்துவையுட்கொண்டு ஜீரணிப்பதோ வெகு சகஜமாய் ஒவ்வொருவரும் செய்யக் கூடியதாயிருக்கும். அதுபோல, அறிவு விர்த்தியாகும் முறையறிந்து, அறிவூட்டி வளர்ப்பது கஷ்டமாயிருக்கலாம். ஆனுல் அறிவு விர்த்தியாகும் வழி ஸ்வபாவமாக எல்லாரிடத்தும் அமைந்திருக்கிறதும் அது அவ்விதிப்படி நடப்பதும் சகஜமாயிருக்கிறது. ஒருதாய் குழந்தை வளர்க்க பக்குவமறிந்து பாலூட்டி வளர்க்க எவ்வளவு அறிவும் அனுபவமும் வேண்டுமோ அவ்வளவு அறிவும் அனுபவமும் வேண்டும், குழந்தைகளுக்கு வித்யாப்பியாசம் செய்விக்கவும்; ஏனென்றால் பக்குவமறியாது குழந்தைகள் மனதை விர்த்திசெய்யப்பாடுபடும் உபாத்யாயர், அதற்குச்சொல்ல முடியாததீங்கிழைப்பது நிச்சயம். ஆனுல் குழந்தை வளர்வது எப்படி ஊட்டம் கிடைத்தமட்டில் தானுகவளருகிறதோ, அப்படியே குழந்தைகளின் மனேவிர்த்தியும், சகவாசத்தை யொட்டி அது தானுக விர்த்தியாகும். இந்த சகவாசம் நல்லதாகவும், குழந்தைகளின் இயற்கை ஸ்வபாவத்துக்குப் பொருந்தினதாகவும் இருக்கும்படிச்செய்வதே பெற்றோர், உபாத்யாயர்களின் பெருங்கடமையாம். இதுசெய்ய சூக்ஷ்மபுத்தியும், தத்துவஞானமும் வேண்டும். நமது பிரதம பாடசாலை உபாத்தியாயர்கள் படிப்பிலும், உலகானுபவத்திலும் குறைந்தவர்களாகவிருப்பதால், இந்த உண்மையை உள்ளபடியுணர்வது அவர்களுக்கு எளிதில் சாத்தியமாகாது. ஆகையால், தத்துவஞானம் விளங்க அவர்களுக்கு நமது ஆத்மவித்யா சாஸ்திர முறையை அனுசரித்து ப்ரோபெல் 'கிண்டர்கார்டன்' முறையென்று சொல்லி யேற்படுத்திய போதனுமுறைக்கு ஆதாரமான மூலக்கொள்கைகளை யவருக்கு சுயபாஷையில் பிரசங்கமூலமாகவும் மதபோதனையாகவும் விளக்கவேண்டும். இப்படி விளக்குவான், "பிரகிருதி

யினுண்மையிற் பரமனைக்காணலாம்" என்னும் தலைப்பின் கீழ் "தத்துவமெங்குண்டு தத்துவனங்குண்டு" என்னும் திருமூலர் திருமந்திரத்திற் செப்பிய ஒரு மேலான தத்துவக்கொள்கையை விளக்கிக்காட்டி மதபோதனாருபமாக இச்சஞ்சிகையின் முதல் விஷயத்தையும், அதையொட்டி ஆத்மதத்துவத்தை விளக்க, இரண்டாவது விஷயத்தையும் எழுதிப்பிரசுரித்திருக்கிறோம். பிரகிருதி தத்துவமுணராது ஆத்மதத்துவமுணர லரிதாகையால், முன்னே அதைவிளக்கிப் பின்னர் ஆத்மதத்துவத்தை விளக்கியிருக்கிறோம். கிண்டர்கார்டன் போதனா முறைக் கொள்கைகள் உண்மையில் நம்முன்னோர் போதித்த ஆத்மவித்தையேயன்றி வேறல்ல வென்பது ஊன்றிப்பார்க்கில் ஸ்பஷ்டமாய் விளங்கும்.

C. V. S.

---

## A SHORT HISTORY OF JAPAN.

## ஜப்பான் சரித்திரச் சுருக்கம்.

---

இது 'சுதேசமித்திரன்' பத்திராசிரியர் ம-ா-ஸ்ரீ ஜி. சுப்பிரமணியஐயர் அவர்களாலியற்றப்பட்டது. "இந்தியாவைப்போல் ஜப்பானும் ஏஷியா கண்டத்துக்கீழ் நாடாயிருந்தும், இந்தியாவைப் போலவே அதுவும் சமீபகாலம் வரையில் அறியாமையாகிய இருள்மூட்டம் படரப்பெற்றிருந்தும், அது அன்னியர்கள் மேலதிகாரத்துக்குள் அகப்பட்டுக் கொள்ளும் போலிருந்த சமயத்தில், தலைவர்கள் தேசாபிமானத்தைப்பாராட்டி, தீர்க்க புத்தியுடனும் தைரியத்துடனும் தேசத்து நன்மைக்கவசியமான புதுமைகளை யங்கீகரித்துப் பயப்படாமல் முன்னின்று முனைந்து சீர்பெற்றதாகையால்" இத்தேச சரித்திரத்தைத் தமிழோர் சாரமறிந்துபடித்துப் பயன்படுவதற்கு ஹேதுவுண்டென் றெண்ணி முதல் முதல் இந்த ஜப்பான் தேசசரித்திரத்தைப்பற்றி யெழுதி இது நன்றாக அங்கீகரிக்கப்பெற்றால், இந்தியா, இங்கிலாண்ட, பிரான்சு, ஜர்மனி, இடலி, ருஷியா, அமெரிக்கா முதலிய தேசங்களின் சரித்திரங்களையும் இவ்வாறே சுருக்கமாய்த் திரட்டித் தமிழில் எழுத உத்தேசித்தவராய் நமது கிரந்தாசிரியர் இதைப் பிரசுரித்திருக்கிறார் என்று தெரியவருகிறது. இதை யெழுதியவர் அவருடைய புத்திசாமர்த்தியத்தாலும் இந்தியாவில் பல்லாண்டு தேசக்ஷேமத்தை நாடியுழைத்துவந்த காரணத்தாலும், தேசங்களின் சுக சௌக்கியத்துக்கு வேண்டியவிஷயங்களை அகன்றுவிரிந்த மனது கொண்டு சாங்கோபாங்கமாய் அறிந்துணரும் சக்திவாய்ந்த தன்மையினாலும் இவ்வித சரித்திரங்களினால் இதரதேசங்களையும் இத்தேசத்தையும்பற்றி நமது தேசத்தார் அறிந்துகோள்ளவேண்டியவிஷயங்களைத் திரட்டி யெடுத்துப்போதிக்க அருகராமென்பதிற் சந்தேகமில்லை. தேசவிர்த்தாந்தங்களை யறிந்துகொள்வதிலும், அவைகளின் நோக்குப் போக்குகளையும், அவைகளில் பொதிந்துகிடக்கும் தத்துவங்களையும் உள்ளபடி யறிந்துபற்றுவது ஒரு தேசசரித்திரத்தைப்பற்றிப் படித்துப் பயன்படுவதற்கு இன்றியமையாத சாதனமாம். ஆகையால் இத்தனை தேசங்களின் சரித்திரத்தையும் வாசித்து அவைகளின் சாராம்சத்தை நம் தேசத்தவர்களுக்குப் போடக்கருதிய இவருடைய தத்துவக்கொள்கைகள் எப்படியிருக்கின்றனவென்று சற்று ஆராய்தல் வீணாகாது.

முகவுரையில் நம் தேசத்தாரிடத்துள்ள குணாகுணங்களை யெடுத்துச்சொல்வதில் தேசாபிமானமும் ஐக்கியமும் இல்லாக்குறையாலே நாம் வீணாகக்கெட்டுப்போகிறோமென்று சொல்கிறார். நாம் சோம்பித்திரிவதற்குக்காரணம் நமது பூர்வீக மதக்கொள்கைகளென்றும், மூக்கைப்பிடித்துக்கொண்டு கண்ணை மூடிக்கொண்டிருந்தால் காரியமாகாதென்றும், ஊக்கமும்உழைப்பும் பிறரைப்பார்த்துப் பயன்படும் தன்மையும் நமக்கு வேண்டுமென்கிறார். பூர்வீகமதக்கொள்கைகளா லுண்டான ஸ்வபாவகுணத்தை யுடனே மாற்றுதல் கூடாமையே. ஆனால் அதைவிட்டுப் பிறதேசத்தாரைப்பார்த்து நடிப்பதால் ஏதோ வாரிக்கட்டிவிடலாமென்று இவர் நினைப்பது சுத்தப்பிசகு. எதுவும் ஸ்வபாவத்தை யொட்டிச்செய்யும் முயற்சி பயன்படுவதுபோல்பிறரைப்பார்த்து அவரைப்போல் நாமும் ஆகவேண்டுமென்று செய்யும் வெளிமுயற்சி பலித்துப்பயனைத்தாராது. பயனீந்தாலும் அப்பயன் நிரந்தரமானதாகவிராது. ஒரு மனிதனுக்காகட்டும், ஒரு ஜாதிக்காகட்டும் ஸ்வபாவமாக ஏற்பட்ட குணம் திடீரென்று மாற்றத்தக்கதல்ல. அது வெகுகாலம் பழக்கத்தால் வாசனையாக நமது உள்ளத்தில் ஒடுங்

கிக்கிடக்கிறது. அதை மாற்றவேண்டுமென்றால், பலவருஷகாலங்கள் தலைமுறை தலைமுறையாக வுழைத்துமாறவேண்டும். ஐரோப்பியர்களும் மற்றப்படியுள்ள தற்கால நாகரிக முதிர்ந்த தேசத்தார்களும், புஜபலபராக்ரமத்திலும், பொருளீட்டல், தொழில் முயற்சி செய்யல் வியாபாரம் இவைகளிலும் மேலாய் விளங்குவது வாஸ்தவமே. ஸிம்மம் காட்டில் மிருகராஜனாக எல்லாமிருகங்களும் நடுங்கவாழ்வதால், நாமும் காட்டுக்குப்போய் ஸிம்மத்தோடுவாழ்ந்தால் அதன் தைரிய பராக்ரமம் நமக்கு வருமா? நாம் அதைக்கொல்ல முடியாவிட்டால் அது நம்மைக்கொன்று தின்றுவிடுவது நிச்சயம். ஆனால் ஸிம்மத்துக்குள்ளதைரியம் நமக்கிருந்தால் நாம் நமது நாட்டிலேயிருந்து ஸிம்மத்துக்கும்மேலாகவாழலாம். அதுபோல ஐரோப்பியர்கள் இகசுகவிர்த்தியில் சிறந்தவர்களாயிருக்கிறார்களென்று நாம் அவர் தேசத்துக்குச்சென்று அவர் வழிவகைகளைக்கண்டு அதை யனுஷ்டிக்க முயன்றோமானால் அதுவிளங்காது. ஆனால் நாம் செய்யவேண்டியதென்னவென்றால் அவர்கள் எடுத்த காரியத்தைத் தொடுபிடியாகத்தொட்டு எத்தனைதரம் அதில் தோல்வி யடைந்துபோனாலும், தோல்வியைத் தோல்வியாகக் கருதாமல், பிடித்தபிடியில் ஜயமடையும்வரையில் உழைக்கும் ஊக்கமும் விடாமுயற்சியும் நம்மிடத்திருந்தால் நாமும் அவரைப்போல் வியாபாரத்திலன்று, நமது ஸ்வபாவத்துக்கும் தேசவிசேஷத்துக்கும் பொருந்திய விஷயங்களில் அவரைவிட மேலாகவிளங்குவோம். இந்தியாவிலிருந்த அதி மேலான கைத்தொழில்களெல்லாம், அங்கிலேயரைப் பின்பற்றி நடக்க முயன்றகாரணத்தினாலேயே இப்பொழுது நிலைகுலைந்து நசிந்துபோகும்ஸ்திதியிலிருக்கின்றன. இப்பொழுது ஆங்கிலேயரில் மேலானோரே ஐரோப்பிய நாகரிகத்தைப் பின்பற்றி இந்தியா இதுவரையில் கெட்டதுபோதும், இனியும் கெடாதபடி பாதுகாத்த லவசியமென்று சொல்கிறார்கள். மிஸ்டர் 'ஹாவல்' இது விஷயமாய் அடிக்கடி வற்புறுத்தியெழுதிவருகிறார். மற்றவர்களும் அப்படியே சொல்லி அப்போதப்போது முயற்சித்து வந்திருக்கிறார்கள்.

துரைத்தனத்திலும், நடையுடைபாவனைகளிலும், நன்றாகச்சிந்தித்துநிதானித்து உண்மைக்கு உதாரணமாகவிருக்கநடந்துகொள்ளாமல், ஆங்கிலேயர் புகழ்ச்சியை நாடி, அவர்களில் சிறந்தோர் சொல்வதையே வேதவாக்காகக்கொண்டு நடப்பதால் நமக்கு வருங்கேடு இவ்வளவவ்வளவில்லை. அவர்களில் தக்கவர்களே இந்த எளிய குணத்தைக்கண்டு நம்மை ஏளனமாக நினைக்கிறார்கள். மேற்றிசையார் கிறிஸ்துமதஸ்தர்களென்று பேருக்குச் சொல்லிக்கொண்டாலும், அவருடைய மேலான கொள்கைகள் அவர் உள்ளத்தில் நன்றாக ஏறவில்லை. இந்தியாவிலே ஆத்மார்த்தமாக எதையுமுணர்ந்து ஆத்மவிர்த்திக்கு அனுகூலமாக எதையும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்தியாவில் ஜீவன் முடிவுநோக்கைக்கண்டு உளக்கண்ணொளியால் எதையம் நிர்ணயித்துள்ளார்கள். அந்தவுண்மையை யுணரமாட்டாமல் வெள்ளைக்காரரைப் பின்பற்றி அவர்கள் எண்ணங்களையும் கிரந்தங்களையும் இரவல்வாங்கின தாங்களே மேதாவிகளென்றும் தாங்கள் போகும்வழியே சரியானவழியென்றும் குதிக்கிறார்கள். இவர்களுக்கு நமது முன்னோருடைய கருத்தை அவர்களுடைய நிலையிலிருந்து அறிந்துகொள்ளும் திறமையில்லை. ஆகையால் அகக்கண்ணின்றி "முகத்திற் கண் கொண்டுபார்க்கின்ற மூடர்"களாய்த் தாறுமாறாகப் பேசிப்பிதற்றுகிறார்கள். இவர்கள் ஏதோவயிற்றுப்பாட்டையுன்னிவெள்ளைக்காரன் துரைத்தனவேலைக்கு இராயஸக்காரர்களில்லையென்று, தன் வியாபாரசிந்தையே மேலாகக்கொண்டு, சுதேசிகளைப் படிப்பிக்கச்செய்த ஏற்பாட்டில் அரைகுறைப்படிப்புப்படித்து ஆத்மஞானமின்றி கண்டதே காக்ஷி கொண்டதே கோலம் என்று வெள்ளைக்காரன் சொல்லும் பௌதிக தத்துவ வுண்மைகளை வாயால்மட்டும் சொல்லிப் பிதற்றிக்கொண்டு, நானும் இந்தியாவுக்குத் தலைவனாயிருப்பேனென்று வந்தால், பூர்வீக இருஷிகள், தீர்க்கதரிசிகளாய் ஏற்படுத்திய பழக்கவழக்கங்களே புருஷார்த்தம் நான்கும் கொடுக்கும் என்று நம்பியிருக்கும் சாதாரண ஜனங்கள் இவர்களைப் பின்பற்றிநடக்கக் கூசிப் பின்வாங்குகிறார்கள். ஆகையால் இந்தியாவிற்குத் தலைவர்கள் வேண்டும், தலைவர்கள்வேண்டும் என்று, தலைமை நடாத்துவதற்கு வேண்டிய யோக்கியதையின்றிப் பிதற்றினால் அவர்கள் தலைவர்களாவது எப்படி? ஒருதேசத்துக்குத் தலைவனாயிருப்பவன் அத்தேச ஜனங்கள் நம்பும் மூலக்கொள்கைகளெல்லாம் தன்னிடத்துப் பொருந்தி விளங்குபவனாக விருக்கவேண்டும். தேசா

பிமானம், ஸ்வபாபிமானத்தின் விர்த்தியேயன்றி வேறல்ல. ஸ்வபாபிமானி, ஒரு படியேறினால் குடும்பாபிமானியாகிறான். குடும்பாபிமானி யொருபடி யேறினால் குலாபிமானியாகிறான். குலாபிமானி யொருபடியேறினால் ஜாதியபிமானியாகிறான். ஜாதியபிமானி ஒருபடியேறினால், மதாபிமானியாகிறான். மதாபிமானி யொருபடி யேறினால், தேசாபிமானியாகிறான். தேசாபிமானி ஒருபடியேறினால் உலகாபிமானியாகிறான். உலகாபிமானி ஒருபடியேறினால்,மோக்ஷாபிமானியாம் முமுக்ஷுவாகிறான். இவன் இந்த மோக்ஷாபிமானத்தையும் விட்டு இதற்கு மேலேற வேண்டுமானால் தத்துவ ஞானியாகவேண்டும். இந்த தத்துவஞானமே எல்லாப் பொதுநன்மைக்கும் மூலாதாரமாயிருப்பது. தத்துவ ஞானமுள்ளவன் இகம் பரமிரண்டிலும் தான் செலுத்தவேண்டிய கடமைகளை அபிமானமின்றி ஈசுவரப்பிரீதியாகச் செய்கிறான். இப்படிச் செய்வதே இகபரசுகம் எல்லாவற்றையும் கொடுக்கும். இதுவே பூர்வத்தில் நமது ஆரிய மதசிரேஷ்டர்கள் எல்லா நன்மைக்கும் காரணமாக வுணர்ந்து எதையும் இவ்விதிகொண் டேற்படுத்தியுள்ளார். இந்த உண்மையை யுணரமாட்டாது நம்மில் இங்கிலீஷ் படித்தவர்க ளனேகர் வெள்ளைக்காரர்கள் அபிப்பிராயங்களைப் பின்பற்றி அவர்கள் கொண்டாடுவதையே தாங்களும் மேலாகக்கொண்டாடி அதனால் தங்களுக்கு ஏதோ சந்தர்ப்ப விசேஷத்தால் ஒருவித பலனுண்டானதுபற்றி எல்லாரையும் அதுவழிபற்றி யொழுகச் சொல்கிறார்கள். இவர்கள் பரோபகாரமாகச்சொன்னாலும், சாதாரண ஜனங்கள் இவர்கள் வார்த்தையைக்கொண்டு மதிக்காமல், நடத்தையைக்கொண்டு மதித்து இக்காலத்துப் படிப்பு சோற்றுக்கு வழியாக வயிற்றுப் பிழைப்புக்கு உதவுமேயன்றி 'உயிர்பிழைக்க' இதனால் பிரயோஜனமில்லையென்று நன்றாக அறிந்துகொண்டு விடுகிறார்கள். அதற்கேற்ப, நூதன நாகரிகர்களும், மூக்கைப்பிடி, நாக்கைப்பிடியென்று பூர்வ மதக்கொள்கைகளைப் பழிக்க மட்டுமறிந்தார்களேயன்றி, அதெல்லாம் தப்பு ஆத்மக்ஷேமத்துக்கு அவசியமானது இன்னதென்று சொல்லச் சக்தியற்றவராய், துரைத்தனச் சீர்திருத்தமே மேலானதென்று சொல்லி, வெள்ளைக்காரர்கள் செய்யும் அக்கிரமங்களைக் கண்டித்து, "அவன் கிடக்கிறான் குடிகாரன், எனக்கிரண்டுதிராம் வார்" என்று சொல்கிற பழமொழிப்படி, அதிகாரமும் சந்தர்ப்பமும் கிடைத்தால் அவர்களிலும் மேலான அக்கிரமங்கள் செய்கிறார்கள்.

நம் முன்னோர் எதையும் பரத்தை யுத்தேசித்து நல்லவழியில் நடக்க வழி யேற்படுத்தினார்கள். இப்பொழுதுவெள்ளைக்காரன் வியாபாரப் பெருமையில், வியாபாரக்கொள்கையையே முக்கியமா யனுசரித்துச் செய்துவரும் துரைத்தனத்தில் எதுவும் சுயநயம் காரணமாகவே உழைக்கவேண்டுமென்று ஏற்படுத்திவிட்டான். மனிதன் முயற்சிக்குக் காரணஹேது சுயநயமாக ஏற்படவே, பரசுகம் காரணமாகவே யுழைத்து வந்தார்க்கு உழைக்கவும் ஊக்கம் பிறக்கவும் போதுமான ஹேதுவின்றிப் போய்விட்டது. சுயநயம் சின்னத்தனம். அது சிலருக்குமட்டும் உழைப்புக்குத் தூண்டுகோலாகவிருக்குமேயன்றி எல்லாருக்கு மிருக்கமாட்டாது. ஆனால் ஆங்கிலேயர் அதைப்பற்றித்தானே முன்னுக்கு வந்திருக்கிறார்களென்றால், ஸிம்மம் மிருகராஜனாயிருப்பதால் மனுஷனும் ஸிம்மத்தைப்போலாகவேண்டுமென்றால் சாத்யமாகுமா! ஆங்கிலேயர்சிறப் புக்குக் காரணம் சுயநயம் பாராட்டும் தன்மையுமல்ல பொருளாசையுமல்ல: ஆனால் என்னவெனில், அவர்கள் பிடித்தபிடி யெதுவாயினும் அதுவே மேலானது; அதை நிறைவேற்றுவதே அவர்கள் கடன்: அவர்கள் மனம்வைத்த எதுவும் அவர்களால் நிறைவேற்ற சாத்தியமானதேயன்றி தங்களால் சாத்தியமாகாத காரிய மொன்றுமில்லை என்கிற சுயநம்பிக்கையும், தாங்களிந்தமட்டில் தங்களெண்ணம் உத்தமமானதேயென்கிறஉள்ளத்துணர்வும், என்று நமது இராஜப் பிரதிநிதி லார்ட் கர்ஸன், டில்லி தர்பார் நடந்தகாலையில் செய்த பிரசங்கத்தில் இந்த உள்மர்மத்தை வெளியிட்டுப்பேசினார். "Self-Reliance"- தன்னில் நம்பிக்கையுள்ள எவனும் தான் உண்மையாக நம்பினதை யுள்ளபடி முடித்துத்தீரும் சக்திவாய்ந்தவனா யிருக்கிறான். முதலாவது சுயநம்பிக்கைவேண்டும். இரண்டாவது தான் பிடித்தபிடி சுயநயம்பற்றியன்று, சத்தியமாய் அதை நிறைவேற்றினால்தான் நமக்கு கதிமோக்ஷமுண்டு என்கிற உள்ளத்துணர்வு வேண்டும். இந்த இரண்டுமுள்ள விடத்தில் ஜயமும் காரியசித்தியும் கட்டாயம் உண்டா

கும். இவ்விரண்டு மில்லாதவிடத்து யானை பலமிருப்பினும், அது விம்மத்தின் தைரியத்துமுன் பிரயோஜனப்படாததுபோல், இந்த உள்வலி யுள்ளார் முன் அது பலிக்காதுபோம்.

எந்ததேசம் முன்னுக்குவந்தாலும் எப்பொழுதும் மாறாத இந்த உண்மைவிதிபற்றி முன்னுக்கு வரவேண்டுமேயன்றி இதற்கு மாறாக வரமுடியாது. வந்தாலும் அந்நிலை வெகுகாலம் நீடித்திருக்காது. ஜப்பான் தேசசரித்திரத்திலும் இந்த சூக்ஷ்மவிதியையனுசரித்தே அவர்கள் முன்னுக்கு வந்துள்ளாரென்பது நமது கொள்கை. எல்லாவிர்த்தாந்தங்களும் இதை விளக்குமளவுக்கே சரித்திரசாரமாக நமக்குப் பிரயோஜனப்படத்தக்கவையாம். இல்லாவிடில் அவைகளுக்குத் தத்துவ மதிப்புஇல்லை. ஒரு மனுஷனாகட்டும், ஜாதியாகட்டும், தேசமாகட்டும், உண்மையான ஒருதத்துவத்தை உட்கொண்டு அதற்காகத் தன்னை மறந்து உழைக்குமளவுக்கே அது முன்னுக்கு வரும். ஜப்பான் தேசத்தின் வியாபாரச்சிறப்பை மெச்சுகிறோம். ஆனால் அது எப்படியுண்டாயிற்று? காங்ரெஸ் மேடையிலிருந்தும் சட்டநிரூபண சபையிலிருந்தும் பிரசங்கித்ததனால், ஜனங்கள் அதைக் கேட்டு முன்னுக்கு வந்தார்களென்பதற்கில்லை. துரைத்தனஅதிகாரத்தில்அதியுன்னத பதவியடைந்து அரசன் கையிலுள்ள அதிகாரமெல்லாம் கிடைக்கப்பெற்ற ஒரு இராஜதந்திரநிபுணர், தேசக்ஷேமத்துக்கு வியாபார விர்த்தி யவசியமென்று உள்ளத்திற் பட, உடனே அவ்வுன்னத பதவியையும் அதிகாரத்தையும் சிறப்பையும் தானாக விட்டு விட்டு, வியாபாரத்தில் தலையிட்டுக்கொண்டு, வியாபாரம் செய்தல் கனவான்களுக்கும் பிரபுக்களுக்கும் மகா ஈனமாக மதிக்கப்பட்டகாலத்தில் ஜாதிப்பிரஷ்டனாகி, வியாபாரத்தைக் கைக்கொண்டு அதில் தன்னுடைய மேலான திறமையையும் புத்திவன்மையையும் காட்டி அரசனும் வியாபாரிகளை மதித்து அவர்களை வலுவில் தம்முடைய ஆலோசனை சபைக்கழைத்து அவர்கள் உதவியை நாடும்படி வியாபாரத்தை முன்னுக்குக் கொண்டுவந்தார். இவர்தான் உண்மையான தலைவர். வியாபாரத்தலைவரில் இவரே அத்தேசத்துக்கு இன்னும் முதன்மையாயிருக்கிறார். ஜனங்கள் ஒருவரைத் தலைவராகமதித்து அவர்வழிபட்டு நடப்பது அவருக்குள்ள ஆஸ்திபாஸ்தி அதிகாரங்களினாலல்ல. தான் மேற்பூண்ட விஷயத்தில், உடல்பொருளாவியையும் கொடுத்துழைப்பார் யாரோ அவரே உண்மையில் தலைவராவார். அவருடைய செல்வாக்கு "பள்ளத்தில் நீர்தங்குவதுபோல்" அவருடைய உண்மையாம் உயர்ந்த நிலையிலிருந்து தானாகவோடிப்பரவுகிறது. அந்தச் செல்வாக்கே அழியாத்தன்மையுள்ளது. ஜனங்கள் எப்பொழுதும் மனிதரை நிரந்தரமாகமதிக்கார். ஆனால் மூலக்கொள்கைகளை மதிக்கப்பழகின ஜனங்கள் தாங்கள் கொண்டாடும் கொள்கைகள் யாரிடத்து விளங்குகிறதோ அவரைத் தெய்வமாகக் கொண்டாடுவர். கொள்கையை மதிக்கப் பழகாத ஜனங்கள் எப்பொழுதும் நெல்லிக்காய் மூட்டைகளே. மனிதரை ஒன்றாகக்கட்டி ஒருமைப்படுத்துவது உள்மதம் அதாவது ஸத்யம். மதங்களுக்கெல்லாம் ஆதாரமாயிருப்பது கொள்கைகள். கொள்கைகள் எப்போதும் தத்துவவழிப்பட்டு நடப்பன வாதலால், தத்துவஞானம் எல்லாவற்றிற்கும் ஆதாரமாம். இதைப் பஹிரங்கமாகச் சொல்லி யேற்படுத்தினாலும் சரி, தந்திரமாக மதச்சடங்குகளிலும், கொள்கைகளிலும் பொதிந்து கிடக்கச்செய்து போதித்தாலும்சரி, உண்மையில் இத்தத்துவஞானம் ஜனங்கள் மனதில் வேரூன்றுவதற்குத்தக்கபடியே அவர்களிடத்தில் ஒற்றுமையும் ஐக்கியமு முண்டாகும். இதைமேலோர் உள்ளாராய்ந்து சிந்தித்து உண்மையுணர்ந்துகையாடினால் ஜனங்களை நல்வழிக்குக் கொண்டுவரலாம். இதற்கு சாத்தியமில்லாதவர்கள் என்ன ஆத்திரப்பட்டெழுதினாலும் அவர்கள் முயற்சி விழலுக்கிறைத்த நீர்போல் வீணிலே கழியுமென்பது நமது உள்ளத்திற்படும் உண்மையாயிருக்கிறது. உள்ளத்திற் பட்டதை யொளிக்காது உள்ளபடி சொன்னோம். இதனால் யாரிடத்திலும் வைஷம்யம் அல்லது அசூயைபாராட்டி யெழுதினதாக நினைக்கத்தேவையில்லை.

---

## "THE AUTOBIOGRAPHY OF A BRAHMIN GIRL."

## "முத்துமீனாக்ஷி."

"முத்துமீனாக்ஷி." இது என்னபேர்! யாருடையது? இப்பேருள்ளார் குணமென்ன, குலமென்ன, கோத்திரமென்ன, நடையென்ன, நாகரிகமென்ன? இப்பேரைச் சொன்னமாத்திரத்தில் இவை யறிந்து

கொள்ளவேண்டிய தவசியமென்று இதை வாசிப்போர் மனதில் தானேபடும். இப்பேரைப் பார்த்த மாத்திரத்தில் நமக்கும் அப்படித்தான்பட்டது. நமது ஆசைதீர எல்லாவற்றையுமறிந்து கொண்டோம். முதலில் பிரியமாயிருந்தது; பிறகு ரஸமாயிருந்தது; பிந்தி யனுதாபமும் பச்சாதாபமுமுண்டாயிற்று; அப்பால் அது துயரமும் துக்கமுமாய் முடிந்தது. இத்தருவாயில் அகஸ்மாத்தாய் நேர்ந்த ஒரு சந்தர்ப்பத்தால், இதெல்லாம் மாறிவிட்டது. இதுகாறும் உடனிருந்தொத்து நின்றாடிவந்த மனம் இப்பொழுது தனியிருந்து மேல் நடப்பதென்னாமோ வென்று ஏக்கம் பிடித்துத் தபிக்கத் தலைப்பட்டது. தாபமடங்க எல்லாமுணர்ந்து ஏக்கமும் தீர்ந்தது: கதையும் முடிந்தது. ஆனால் நம்மனதிற் குண்டான சஞ்சலம் தீரவில்லை. இந்த வரலாற்றை யெல்லாமெழுதி வெளியிட்டாரைக் கண்டிப்போமென்றால், அவர் "கெட்டிக்காரர்" தான் நேரில் வெளிவராமல் தன்பொறுப்பின்றிப் பதுங்கிவிட்டார். "இது அ. மாதவையர், பி. ஏ., இயற்றியது" என்று முகப்பேட்டில் வரையப் பட்டிருந்தாலும், உள்ளே திறந்து ஆதிமுதல் அந்தம் வரையில் படித்துப் பார்த்தபின் இவர் "இயற்றியது" என்னவென்று நமக்கு விளங்கவில்லை. "முத்துமீனாக்ஷி"யையே இவர் இயற்றினார் போலும். பெண்ணைப்பெற்றுப் பிறனுக்குத் தத்தம் செய்தாற்போல், பெற்றபாக்கியம் இவரதாயிருந்தாலும், முத்துமீனாக்ஷிக்கு உற்ற பாக்கியத்தில் எள்ளளவும் இவருக்குப் பங்காவது பாத்யதையாவது இல்லாமற் போய்விட்டது. "வாழ்வு வந்தாலும் தாழ்வு வந்தாலும் வாழ்க்கைப்பட்டவளோடே" என்கிற வசனப்படி எல்லாம் முத்துமீனாக்ஷி தன்னோடேயென்று தன்னையீன்ற பிதாவை முகப்பேட்டோடு முழுதும் ஒதுக்கிவிட்டாள். இது நிற்க.

"முத்துமீனாக்ஷி" யார், என்ன? இதை வாசிப்போர் ஆவல்தீர, நாம் முகப்பேட்டில் கண்டதை இங்கே வரைகிறோம்: "முத்துமீனாக்ஷி: ஒரு பிராமணப்பெண் சுவசரிதை." இவ்வளவோடு இதன் கருத்தையறியச் சூக்ஷ்மபுத்தி யுள்ளவர்களுக்கு முகப்பேட்டிலுள்ள பின்வரும் மேற்கோளுதவி புரிவதாகும்.

"தொன்முறைமாறித் துலங்கும்புதுமுறை;
நன்முறையொன்றினை ஞாலம் ஆழுங்காமே,
பன்முறையின் ஆளும் பரன்."

இதோடு நிறுத்திவிட்டால் இதைப் பார்வை யிட்டெழுதப் புகுந்த நம் பாடு சுகமாகப் போய்விடும். ஆனால் அப்பொழுது நம்கடமையைச் செய்ய நாம் பின்வாங்கினவ ராவோமென்னு மெண்ணம் நம்முள்ளத்தை வாதிக்கும். நம்மைப்போல் ஸத்யவிரதம் பூண்ட முத்துமீனாக்ஷியின் காமிய சரீரம் நம்மனக்கண்ணுக்கெதிர்ப்பட்டு "ஹே பிராதா, இவ்வளவு தானா உன் தைரியம்!" என்று துக்கம் விசாரிக்க வந்துவிடு மென்பதும் நிச்சயம். ஏனென்றால் முத்துமீனாக்ஷியின் மனோசக்திக்கு இது சாத்தியமே யென்பதிற் சந்தேகமில்லை. ஆகையால் எதற்கும் பயப்படாமல், வேறெதையும் பற்றிச் சிந்திக்காமல், "ஸத்யமே கதி" யென்று ஸத்யத்தை நம்பி, உண்மைக்கு ஒத்தவாறு நமதுள்ளத்திற் பட்டதை உள்ளபடி யெழுதிவிடுவதே உத்தமமென்று தீர்மானித்துத் துணிந்துவிட்டோம். உண்மையைப்பேச உடன்பட்டபின் முத்துமீனாக்ஷியின் புன்சிரிப்பும் பயனிலதாம்; அவள் மாமியாராம் கொடியவள் கோரப்பார்வையும், விஷம் கலந்தவார்த்தைகளும் நமக்கு லெக்ஷியமில்லை.

முத்துமீனாக்ஷியின் சுவசரிதையை, அழகு பொருந்திய அவள் வாக்கால்கேட்டு மகிழவிருப்பமுள்ளவர் அவள் புஸ்தகத்தை வாங்கி வாசிக்கட்டும். அவள் சரிதையே நமக்கு முக்கியம். ஆகையால் அதைச் சுருக்கமாகச் சிலவார்த்தைகளிற் சொல்லி முடிப்போம். முத்துமீனாக்ஷி "பாண்டிநாட்டிலே, இராமாபுரமென்னும் கிராமத்திலே சங்கரையருக்கும் பார்வதியம்மாளுக்கும் இரண்டாவது பெண்ணாகவும் மூன்றாவது குழநதையாகவும் நான் பிறந்தேன்" என்று அவள் சுவசரிதையைச் சொல்லத் துவக்குகிறாள். இவள் தாயார் இவள் 4-வயசுக் குழந்தையாயிருக்கையில் இவளையும் இவளுக்கு எட்டுவயசு மூத்தவனான சுப்பிரமணியன் என்னும் இவள் தமயனையும்,50 வயதான தன் பர்த்தாவையும் விட்டுவிட்டுப் பரலோகம்போய்விட்டாள். அவள்போனபின் முத்துமீனாக்ஷியின் அத்தை யொருத்தி விட்டோடிருந்து குழந்தையையும் குடித்தனத்தையும் பார்த்து வந்தாள். சங்கரையர் மனைவியின் பிரிவாற்றாமல் தன்பிள்ளை சுப்பி

ரமணியனுக்குப்பார்த்து நிச்சயம் பண்ணியிருந்த ஒரு தஞ்சாவூர்ப்பெண்ணைக் கூட ஆயிரம் கொடுத்து தனக்குள்ள 2-வேலி நிலத்தையும் அப்பெண்பேருக்கு எழுதிவைத்துத் தானே லிகயாணம் செய்து கொண்டு ஆறுதலடைந்தார். கலியாணம் செய்த 2-வருஷங்களுக்கெல்லாம் சங்கரையருக்குப் பெண்டாட்டி வீட்டுக்குவர மறுபடியும் புதுமாப்பிள்ளையாய் விட்டார். ஆனால் பழையதுக்கம் அவரை வெகு நாளைக்கு விட்டு விலகியிருக்கவில்லை. புதுப்பெண்டாட்டி, புருஷனுக்குத் தன்னிடத்திலிருக்கும் காதல் எப்படியிருப்பினும், அவன் குடுமி தன்கையில் நன்ருகச் சிக்கிபிருப்பதை யுணர்ந்து மெதுவாக அன்புமேலிட்டால்தானே ஐயருக்குத் தலையணை மந்திரோபதேசம் செய்யத்தலைப்பட்டாள். மந்திர சித்தி கீக்கிரத்தில் தானே கைகூடிவர, அத்தையம்மாள் அழ அழ முத்துமீனுக்ஷியையும் தன் உடன் பிறந்தானையும் விட்டு விட்டு தன்னூர் போய்ச்சேர்ந்தாள். இது முதல் முத்து மீனுக்ஷிக்கு குட்டுக்கும், வசைமொழி, அடி, உதை இவைகளுக்கும் குறைவில்லை; அத்தையோடு போன அப்பம் கொழுக்கட்டை அவளுக்கு இப்படி உருமாறிக்கிடைத்து வந்தன. அத்தையம்மாள் தன்னிடத்தைக் காலிசெய்யவே, சங்கரையருக்கு மாமியாரும், மைத்துனியுமாக வீடுகொள்ளாதபடி விருந்தினர் வந்து விட்டார்கள். ஒருநாள் படுக்கையுள்ளே சங்கரையர் தன் பெண்டாட்டி தன் கட்டளைமீறி அந்யபுருஷனோடு பேசினதற்காக அவளைக் கண்டனை தண்டனைசெய்யத் துணிந்து விட்டார். நாலு நாள் கழிக்கவும் நல்ல மாமியார் தன் கண்ணுன குழந்தைக்குக் காசிமாலை போட்டுப் பாராமல் தனக்குக் கண் பூத்துப்போகிறதென்பதைச் சாக்கிட்டு மாப்பிள்ளையைச் சண்டைக்கிழுத்தாள். மாப்பிள்ளை எவ்வளவு அடக்க ஒடுக்கமாயும் நியாய நிதானமாயும் பதில் சொல்லியும் மாமியாரம்மாளுக்குப் பொறுக்கவில்லை. கோபம் கிளம்பி விட்டது. அம்மாள் அறிவுகெட்டு தான் அருமையாய்ப்பெற்ற பெண்ணை பாழுங்கிணற்றில் கொண்டு போய்த்தள்ளுவதுபோல் ஆயிர ரூபாயை வாங்கித் தன்மடி நிறையக் கட்டிக்கொண்டது போதாதென்று சங்கரையர் நிலத்தையுந் தன் பெண்பேரால் எழுதிவாங்கிக்கொண்டு வீணைக்கொடுத்துவிட்டாள். சங்கரையரிடத்தில் அந்தம்மாள் தயைபூரித்து அவரையோட்டாண்டியாக்கித்தன் பெண்ணைக் கொடுத்தது போதாதென்று அவரிடத்தில் கருணை மிகுதியால் அவருடைய உள்ளப் பற்றையுமறுக்க நினைத்து ஸந்யாசம் கொடுத்தால் வாங்கமாட்டாரென்று தன் பெண்பேரிலிருந்த நிலத்தை விற்றுப்பணத்தையெடுத்துக்கொண்டு தன் அருமைப்பெண் அம்மிமிதித்து அருந்ததி பார்த்து அக்னிசாக்ஷியாய்ச் சங்கரையரைக் கைப்பிடித்தகாரியம் கைகூடி விட்டதென்று அவளையு மழைத்துக்கொண்டு வெற்றிக்கொடி பறக்கத் தன்னூர் போய்ச்சேர்ந்து விட்டாள். இதோடு இவள் சரிதைமுடிந்தது. நமக்குள் அக்னிசாக்ஷியாகச் செய்யும் ஆத்மவிவாகம் கொள்வினை கொடுப்பினை வியாபாரமாக மாறினதின் முடிவு இதுவே. இப்படி முடிந்தும் இதன் கொடுமையை யுணர்ந்தாரில்லை. ஜாதியாசாரமும் மதாசாரமும் இதற்கொன்றும் வாய்திறக்கவழியின்றி 'கலியின் கொடுமை' யென்றும் 'வெள்ளைக்காரன் ராஜ்யம்' என்றும் சொல்லி தன்தலைக்குவரும் கேட்டையுன்னுது, அந்நியர்மேல் பழிபோட்டு, ஊமைகண்ட கனவுபோல், வாய்பேசாதிருந்து மறந்துவிடுகிருர்கள். தீமையோ மேன்மேலும் வளர்ந்து வருகிறது. சீக்கிரத்தில் தானே ஆத்மவிவாகமாக வேற்பட்டது, அடிமை வியாபாரமாக முடிந்து பொறுக்கக்கூடாத பொல்லாங்கு விளைவிக்கும் போலிருக்கிறது. இருந்தாலுமென்ன? ஹிந்துக்களிற்குள் கண்ணுள்ளார் ஒருவருமில்லை: எல்லாரும் அகக்கண்கெட்ட குருடர்களாக விருக்கிருர்கள். ஜனங்கள் இடையனில்லா ஆடுகள் போல் ஒடித்திரிந்து பிரிந்து பாழாகப் போகிருர்கள். இவர்களுக்கும் ஓர் கதிமோக்ஷமில்லையோ நாதாவென்று சிற்சிலர் ஏங்கித் தியங்குகிருர்கள், ஆனால் செய்வதொன்றறியாது சிந்தனையில் மூழ்கிச் சும்மா விருக்கிருர்கள். கெடுவது கெட்டுத் தீர்ந்தால், பிழைப்பது தானே பிழைக்கும். இது நிற்க.

சங்கரையர் தன் மாமியார் தனக்கு ஸந்யாசங் கொடுக்கப் பின்வாங்கி, கையில் பிச்சையோடு மட்டும் கொடுத்துப்போனதை வாங்கிக் கொண்டு பிச்சையெடுக்க மனம்வாராமல் அதைத்தான் தொட்டுத் தாலிகட்டியவளுக்குச் செய்யவேண்டிய கருமாந்திரக்

கடனுக்கு பதிலாகக் கடமுடைக்க உபயோகித்து தன் வீடுவாசல்களை விற்று அத்தையம்மாளையும் குழந்தையையும் சுப்பிரமணியனையும் வரியூரில் இருத்திவிட்டு, தான் திருவாங்கூர் சென்று வியாபாரம் செய்து பிழைக்கப் போனார். அங்குபோய் இரண்டொரு வருஷங்களுக்கெல்லாம் அவருமிறந்துவிட்டார். சுப்பிரமணியனும் முத்துமீனாக்ஷியும் அத்தையம்மாளும் வரியூரில் தங்கியிருந்தார்கள். அங்கேயவர்களோடு சுந்தரேசன் என்னும் ஒரு பையனும் கூடச்சேர்ந்து பழகிவந்தான். இவனும் சுப்பிரமணியனும் பள்ளித்தோழர்கள். ஒரே வகுப்பில் வாசித்துவந்தவர்கள். பரஸ்பரம் அந்யோந்ய சிநேகிதர். சுந்தரேசனும் தாயில்லாப்பிள்ளையானாலும், அவன் தமயன் 100 ரூபாய் சம்பளத்தி லிருந்ததனால் அவனுக்கு வறுமையுபத்திரவமில்லை. ஆனால் மற்றத் துன்பங்களுக்கெல்லாம் குறைவில்லை. சுந்தரேசனும் சுப்பிரமணியனும் இரவும் பகலும் ஒன்றாயிருந்து சேர்ந்து படித்தார்கள். முத்துமீனாக்ஷியும் படிக்கத் தொடங்கினாள். அத்தையம்மாள் விளையாட்டாக ஹிந்து வழக்கப்படி சுந்தரேசனை முத்துமீனாக்ஷிக்கு ஏற்ற புருஷனாகப் பாவித்து அப்படியே தன் மனோபாவம் சிறிதும் நிறைவேறாதென்று தெரிந்தும் அதை வெளியிட்டும் இருவரும் ஒருவருக்கொருவர் ஏர்வையாக விருக்கிறதைப் பார்த்தும் மனமகிழ்ந்தாள். சுந்தரேசனும் அவளைப் பெண்டாட்டியென்று விளையாட்டுக் கழைத்து, அவளுக்கு அதிக சிரத்தையாகப் படிப்புச் சொல்லிக் கொடுத்தான். எல்லாரும் ஒன்றாகவிருந்து சந்தோஷமும் குதிப்புமாய்ப் படித்து வந்தார்கள். முத்துமீனாக்ஷிக்கு (9-வயதுக்குட்டியவள் இப்போ) மாப்பிள்ளை வந்தாற்கூட அவ்வளவு சந்தோஷமாயிராது. தாயின்றிக் கஷ்டப்பட்ட சிறுவர்களெல்லாம் இப்படி சந்தோஷமாக விருப்பதைப் பார்க்க யாருக்குத்தான் ஆனந்தம் பொங்காது! அத்தையம்மாள் தன் துக்கங்களை யெல்லாம் மறந்து சிறிது காலத்துக்கு இக்குழந்தைகளின் நிர்மலமான மனோவிலாசத்தைக் கண்டு ஆனந்தித்திருந்தாள். நாளும், வாரமும், மாதமும், வருஷமும் ஒன்றின்பின்னொன்றாகச் சென்றன. முத்துமீனாக்ஷிக்குக் கலியாணகாலம் கிட்டிவிட்டது. சங்கரையரோ இறந்து போய் விட்டார். என்ன செய்வாள். மூத்தாள் குழந்தைகளிருக்கும் 30 வயது மாப்பிள்ளைக்கு 700 ரூபாய் வாங்கிக் கொண்டு முத்துமீனாக்ஷியை துவிதீயமாக விவாகம் செய்து கொடுத்தாள். முத்துமீனாக்ஷியின் துரதிர்ஷ்டம் கஷ்டப்படவேண்டியதே. தன் தகப்பனாருக்கு இளையாள் வந்தபோது இவள் கஷ்டப்பட்டாளே. இவள் இளையாளாக வாழ்க்கைப்பட்டபோது இளையாளுக்குள்ள அதிகாரம் இவளுக்குக் கிடைத்ததா? இல்லை. வியாதிப்பட்டு பிழைப்பதரிதாயிருந்த காலத்தில், புருஷன்வீட்டுக்காரர் வந்து அழைத்துக் கொண்டு போனார்கள். மருந்தும் மாயமும் பத்தியமும் பட்டினியும் கிடந்து எப்படியோ தலைவிதி பலமாயிருக்கப் பிழைத்தாள். பிழைத்தும் உடனே பெரிய மனுஷியாகவில்லை யென்று அவள் இலங்கணிமாமியாருக்கு வருத்தம். பொறுத்துப் பொறுத்துப் பாாத்தாள் பொறுக்கவில்லை. நாட்டுப்புறத்திலுள்ள மூட வழக்கப்படி, பெண்ணையும் மாப்பிள்ளையும் சேர்த்துவிட்டுச் சாந்தி செய்து விட்டால், நாட்டுப்பெண் சீக்கிரத்தில் ருதுவாய் விடுவாளென்று, காட்டு ராஜாவுக்குக் கேள்வியில்லை யென்கிறபடி, தான் அப்படி நினைக்கவும் நினைத்தபடி நிறைவேற்றி விட்டாள். திரளவைக்கிற சம்பிரதாயங்கூட வீண்வழக்க மென்று நிறுத்திவிட்டாள். இல்லாத கஷ்டங்களெல்லாம் பட்டு பெண் பெரியவளாய்ப் புருஷனோடு கலந்திருக்கும் காலம் வந்த பொழுது புருஷன்முகம் பெண்டாட்டி பாராதபடி வெகுஜாக்கிரதையாகப் பார்த்து வந்தாள். பிள்ளையில்லை யென்று பேயோட்ட ஆரம்பித்தாள். முத்துமீனாக்ஷிக்கு உண்மையாகப் புருஷனிடத்தில் அன்பில்லை யென்று அவளே சொல்கிறாள். காரணம் எப்படியாயினும் அன்பில்லாப் பெண்டீர்க்கு மங்கிலியத்தோடிருப்பினும் அவர்களுக்கு புத்திர பாக்கிய மில்லை யென்பது இயற்கைவிதி யல்லவா? யாரையேமாற்றினாலும் பிரகிருதி தேவியாம் ஈசுவரியை ஏமாற்ற யாராலும் முடியாது. முத்துமீனாக்ஷிக்குப் புருஷனை வெறுக்கக் காரணமிருக்கலாம். இருந்ததாக அவளே சொல்கிறாள். ஆனால் அன்பிலாக்கலவி அவிசாரித் தொழிலே யன்றி வேறல்லவென்று அப்பொழுது அவளுக்குத் தெரியாது. தெரிந்திருந்தால், புத்திசாலியான அவள் அப்படியிருந்திருக்கமாட்டாள். அன்பிலாக் கொடுமை யாரை விட்டது? அவள் மாமியார் தன் அருமைப் பிள்ளைக்குப் பேரன் பிறக்கவில்லை யென்று குறைப் பட்டிருந்தாள். பெண்ணும் கருத்

தரிக்காமற் போகவே, அவளுக்கு மலட்டுப் பட்டமும் கட்டி, மந்திரவாதியை யழைத்துப்பேயோட்டச்சொன்னாள். சிவசிவா, இந்த ஆஷாடபூதிகள் செய்யும் கொடுமை இவர்களை நம்பி இவர்கள் உதவியை நாடும் கொடும்பாவிகளாம் மூடமதிகளின் கொடுமைக்கே ஈடாகச் சொல்லவேண்டும். பிரம்படி யெத்தனையோ, செருப்படி யெத்தனையோ அவன் கையால் பட்டு பெண்ணாகப் பிறந்து பட்ட அவதியெல்லாம் போதாதென்று பேயாட்டமுமாடிப் படாதபாடுகளெல்லாம் பட்டாள் நம் முத்துமீனாக்ஷி. மந்திரவாதி இரக்ஷாபந்தனம் செய்து காசும் அரிசியுமாகக் கிடைத்ததைப் பறித்துக் கொண்டு சென்றான். முத்துமீனாக்ஷிக்குப் பட்டினிகிடந்து அவன் கையால் பிரம்படி செருப்படி பட்டதே லாபம். மாமியாரம்மாளுக்குப் பேரன் உற்பத்தியாகவில்லை. இந்த வைபவத்தில் திடீரென்று பேதிகண்டு முத்துமீனாக்ஷி கணவன் பேரய்விட, மஞ்சள் குங்கும மிட்டுக்கொண்டு தலையில் மயிர் வைத்துக் கொண்டிருக்கும் பாக்கியமும் போய்விட்டது. சுமங்கிலித்தனம் போய்விட்டதென்று சொல்ல இடமில்லை. ஏனென்றால் புருஷனிடத்தில் அவளுக்கு அன்பு விட்டபோதே சுமங்கிலித்தனம் போய் விட்டது. அன்பேயுதிக்க வில்லையால் சுமங்கிலித்தனமே யவளுக்குமில்லை. அப்படியிருக்க சுமங்கிலித்தனம் போயிற்றென்று சொன்னால் ஸத்யமாகவே பதிவிரதம் அனுஷ்டித்து வரும் பெண்டீருக்குள்ள பேருக்கு அபவாதம் வரும். ஆகையால், சுமங்கிலிச் சின்னங்கள் போய்விட்டன. போகவும் கஷ்டம் முன்னிலும் அதிகரித்தது. கணவனிருந்தபோது அவன் கொடுமையை மன்னித்து அன்புபாராட்டத் தாமில்லாத பெண்டாட்டிக்கு அவன் போனதும் மாங்கிலியம் போனது பெருங்குறையாகப் போய்விட்டது. "அகமுடையான் செத்தபின் அறுதலிக்குப் புத்தி வந்தது" என்று பெண்டீர் சொல்லும் வசனம் உண்மையென்று விளங்கச் செய்தாள். விதிவந்தபின் என்னசெய்வது. துணிந்தனுபவிக்கத் தீர்மானித்தாள். எவ்வளவு பொறுமையிருந்தாலும் தாலியிழந்தபின் வயிற்றுச் சோற்றுக்காக, ஐந்தாள் வேலையையும் செய்துவிட்டு, தன்னைப்போலறுத்து நிற்கும் மாமியார் நாத்தியாரிடம் கர்ணகடூரமான வார்த்தைகளும் கேட்க யார்தான் சம்மதிப்பார்கள்? முத்துமீனாக்ஷி யெதிர்த்துப் பேசினாள். அவளுடைய இலங்கிணிமாமியார் அவளை அடித்துதைத்து வீட்டைவிட்டுத் துறத்திவிட்டாள். சுப்பிரமணியன் வந்து தங்கையை யழைத்துக் கொண்டுபோய்விட்டான். தொட்டசனி விட்டது என்று முத்துமீனாக்ஷியும் அலுப்பாற உடன்பிறந்தான் வீடுபோய்ச் சேர்ந்து, அங்கு அவள் மன்னிக்கு ஊழியம் செய்து கொண்டு கைம்பெண்ணுக்குள்ள சந்தோஷத்தோடு சுகமாயிருந்தாள். அவள் இலங்கணிமாமியார், நாத்திகள் இவர்கள் கவலையும் நமக்கொழிந்தது. ஆனால் இடையில் ஒன்று சொல்லத் தவறிவிட்டோம். நமது முத்துமீனாக்ஷி வெகு தைரியசாலி. இயற்கையாகவே கட்டழகுள்ளவள். அவள் அறுத்துக் குளித்தும் அவள் கட்டழகு மட்டும் முற்றும் போய் விடவில்லை. புக்ககத்தில் தன் மாமிநாத்திகள் தன்னைப் படுத்தி தன் மூத்தாள் பெண்ணும் கரிக்கட்டை யொருத்தியையும் அவள் புருஷனையும் தலையில் வைத்துக் கொண்டாடின காலத்து, அந்த மாப்பிள்ளை முத்தம்மாள் கட்டழகைக் கண்டு மோகித்து விட்டபொழுது, தன் மாமி நாத்தி பேரிலுள்ள க்ஷாத்திரம் தீரப் பழிவாங்க நினைத்து, அவனை யிழுத்துக் கொண்டோடி விடலாமா வென்றும் நினைத்தாளாம். ஆனால் இது நினைத்தது மட்டுமேயன்றி நடந்தது ஒன்றுமில்லை. ஏனெனில் அவனிடத்தில் அவளுக்குக் காதல் பிறக்கவில்லை. தன் சக்தியைக் கொஞ்சம் கட்டலாமாவென்று பார்த்தாள். பிந்தியது சரியல்லவென்று சும்மாவிருந்து விட்டாள். முத்துமீனாக்ஷி படித்த புஸ்தகங்களில் பதிவிரதா தர்மம் சேரவில்லை. சேர்ந்திருந்தாலும் அதை யவள் உணரவில்லை. தாயில்லாக் கொடுமையால் அதையறிய வழியுமில்லை. ஆனால் இவள் இளையதாயாருக்குத் தாயிருந்தாளே அவளென்னத்தை யறிந்தாளென்று கேட்கலாம். அவளுக்கும் முத்துமீனாக்ஷிக்கும் எவ்வளவோ வித்யாசமுண்டு. முத்துமீனாக்ஷி கெட்டவளல்ல. உள்ளபடி உத்தமகுணமுள்ளவள். மற்ற சந்தர்ப்பங்களும் சகவாசமும் சரியாகச் சேரவில்லை. "நிறைகாக்கும் காப்பேதலை" யென்பதை யறிந்தவளானாலும் பதிவிரதா தர்மத்தின் பாங்கை யுள்ளபடி யறிந்தவளில்லை. இது இங்கிலீஷில் சகலகலாவல்லவர்களான சுந்தரேசன், சுப்பிரமணியனுடைய போதனையோ, அல்லது சகவாச

விசேஷமோ, அல்லது அவள் இயற்கை சுபாவமோ தெரியவகையில்லை. எப்படியிருந்தாலும் அருந்ததி மரபில் அவதரித்தவளில்லை. அவளை யிப்படிச் சொல்வதால் மற்றப் பெண்டீர்களெல்லாம் தாங்கள் அருந்ததிகளே யென்று நினைத்து மனப்பால் குடிக்க வேண்டாம். அவளைப்போல் உண்மையை ஒளிக்காமல் உள்ளபடி தங்கள் ஹிருதயத்தை யாராய்ந்து பார்த்தால், அப்பொழுது தெரியும் அங்கிருந்து கிளம்பும் கும்பிநாற்றம். ஆனால் முத்துமீனாக்ஷிக்காகவாவது அவள் உரிமையிரையிற் கூறும் "வாயில்லாச் சீவன்களாகிய அவள் "பல்லாயிரம்சகோதரிக"ளுக்காகவாவது "இப்புண்ணிய பூமியிலே" யுண்டான அதியுன்னதமான சுத்தபதிவிரதாதர்மத்தின் உள்மதக் கொள்கைகளைச் சிறிதும் குறைக்க ஸத்துக்களான ஸ்திரீ புருஷர் யாரும் இணங்கார்கள். ஆனால், அப்படிப்பட்ட அதியுன்னதமான பதிவிரதாதர்மத்தைப் பூஜிக்கும் சான்றோர், முத்துமீனாக்ஷியைப் போல் அம்மலைச் சிகரத்துக் கியல்பாகவுள்ள வன்மையால் ஏறமாட்டாது தாழ்ந்தமட்டங்களில் தங்கி உண்மைக்குப் பங்கம்வராமல், உள்ளபடி நல்வழியைநாடி நடப்போர்களைப் பழிக்கமாட்டார்களென்பதும் திண்ணம். ஏனெனில் அவ்வுன்னத பதவியை யடைவதின்கஷ்டம் அவர்களுக்குத் தெரியும். இடையே கைநழுவி, கால்நழுவி, மனநழுவி விழுந்தோர் எண்ணிலர். ஆயினும் அவ்வுண்மையாம் உத்தம நோக்கின் உந்நத உயரத்தில் ஒரு சிறிதும் குறைக்க உடன்படார். ஏனெனில் அதைக்குறைப்பதால் வருங்கேடு சொல்லற்கரியது. விளக்குக்கூண்டு உயரமாயிருப்பதால் அனேகர் வெகுதூரத்திலிருந்து அதன் அடையாளத்தையுள்ளபடி யுணர்ந்து வழிதப்பித் துறைசேரத் தவறிப் போகிறார்களென்று விளக்குக் கூண்டின் உயரத்தைக் குறைத்தால் எவ்வளவு கேடுவருமோ அதிலும் பன்மடங்கு அதிகமாகவிளையும் அதியுந்நதமும் உத்தமுமான பதிவிரதா தர்மத்துக்குப் பங்கம் வர அதன் உள்நோக்கை (ideal)ச் சிறிதும் குறைப்பது. அதைக் குறைத்தால் எத்தனையோ ஆத்மாக்கள் ஈடேறத் தடை செய்வதாகும். ஆகையால் யார் வாழ்ந்தாலும் தாழ்ந்தாலும் "சனாதனதர்மம்" அப்படியேதானிருக்கவேண்டும். அது அப்படியே தானிருக்கும்.

முத்துமீனாக்ஷியின் சரித்திரம் இத்தோடு முடிந்துவிட்டதென்று நினைப்பார்கள் இதைவாசிப்போர். இல்லை—இனிமேல்தான் அவள்சரித்திரம் உண்மையாக ஆரம்பிக்கப்போகிறது. இதுவரையில் நடந்ததெல்லாம் அவள் சரித்திராரம்பத்திற்குக் காரணபூதமாயிருந்த சந்தர்ப்பங்களேயின்றி வேறல்ல—உண்மையில் முத்துமீனாக்ஷி வாழவுமில்லை—இறக்கவுமில்லை. அவளுக்குள்ள வாழ்வோதாழ்வோ அது இனிமேற்றான் வரப்போகிறது. அதற்குக்காரணமாகவும், காரியமாகவும், காரிய காரணமாகவுமிருந்த தர்மாதர்ம பழக்க வழக்க பைசாசங்கள், சாதகபாதகங்களைச் சிக்கறுத்துச் சிந்தித்தெழுதல் தான் கஷ்டசாத்தியமான வேலையாகவிருக்கிறது. இருந்தாலும் இதில் நமக்குத்தோன்றியதைத் தோன்றியபடி உண்மைக்குப்பங்கம் வாராதெழுத "எண்ணித்துணிந்தபின்" இனிப் பின்வாங்குவதிற்பயனில்லை. ஆகையால், இம்முறை இது மிகவும் வளர்ந்து போனது பற்றி இங்கு நிறுத்தி அடுத்தமாசத்துச் சஞ்சிகையில் இதைத் தொடர்ந்தெழுதுவோம்—முத்து மீனாக்ஷியும் தன் தமயன் குழந்தையைத் தொடவுங் கூடாதென்று அவள்மதினி தடுத்ததாலுண்டான வருத்தம் நீங்க, முகத்தில் பால்வடியத்தொட்டிலில் தூங்கி விழித்தழும் அவள் மருமானைத்தாலாட்டித் தூங்க வைக்கட்டும்—அவள் பாட்டைக்கேட்க விருப்பமுள்ளார் கேட்டானந்தமடைய அதைக் கீழேதீட்டுகிறோம்:—

"ஆராரோ ஆராரோ ஆராரடித்தாரோ?
ஆரடித்து நீ அழுறாய் அஞ்சனக்கண் மைகரைய?
[-என்

கண்ணானகண்ணே! என்கண்குழிந்த மாம்பழமே!
தின்னாப்பழமே! திகட்டாதசெந்தேனே!—என்
ஈச்சம்பழமே! இனித்திருக்கும் தீங்கனியே!
வாழைக்கனியே! வரிக்கண்பலாச்சுளையே!-என்
அடிக்கரும்பே! செந்நெல்லே! ஆடையின்கீழ்
[நற்பாலே!
குடிக்குநல்ல குஞ்சரமே! கோதண்டபாணியனே!
[-என்
கண்ணானகண்ணாற்குக் கண்ணூறுவாராதே

சுண்ணும்பு மஞ்சளுமாய்ச் சுற்றியெறிகண்ணுற்கு !
விபூதி வேப்பிலையும் வீசியெறிகண்ணுற்கு-என்
கண்ணேயடித்தவர்யார், கற்பகத்தைத்தொட்டவர் [யார்?
பொன்னேயடித்தவர்யார், பூங்கிளியைத் தொட்ட [வர்யார்?
ஆராரோ ஆராரோ ஆரார் அடித்தாரோ?
ஆரடித்து நீயழுருய், அடித்தாரைச் சொல்லியழு ''

(இன்னும் வரும்)

## சிறுவர்க்கான பக்கம்.

### கங்காதரன் கதை.

(விவேகசிந்தாமணியை வாசிக்கும் ஓர் சிறுமி எழுதியது)

ஒரூரில் கங்காதரனென்று ஒருவனிருந்தான். அவன் எப்பொழுதும் பொய் பேசுவான். அவ்வூரி லொருவீட்டிற்களவு போயிற்று. அக்கள்வனவன் வீட்டிற் போனவுடனே அவனைப் பிடித்துவிட்டார்கள். அவன் கங்காதரனிடத்தில் வந்து அவன் தனக்கென்று பொய்ச்சாக்ஷி கூறினுல் அவனுக்கைம்பது ரூபாய் கொடுப்பதாக வாக்களித்தான். பணத்தாசை பிடித்த அவனும், அப்படியே ஒத்துக் கொண்டான். களவு கொடுத்தவன் பெயர் கிருஷ்ணன். பிறகு இரண்டு நாட்கழித்து விசாரணை தொடங்கிற்று. அப்பொழுது கங்காதரன் நியாயாதிபதியை நோக்கிப் பெட்டியிவனுடையதிவனேக் கள்வனென்று அநியாயமாய்ப் பிடித்தடைத்தீர்களென்றுன். கள்வனும் "அவன் சொல்வதுசரி; பெட்டி யென்னுடையதே" என்றுன். இவை யெல்லாங் கேட்ட கிருஷ்ணன், நியாயாதிபதியை நோக்கி, இப்பெட்டியிலெத்தனை அறைகளிருக்கின்றனவென்றும், எவ்வளவு ரூபாய்களிருக்கின்றனவென்றும், கேட்கும்படிச் சொன்னுன். நியாயாதிபதியும் அப்படியே கேட்டார். அதில் இரண்டறைகளும் ஐம்பது ரூபாய்களும் இருக்கின்றனவென்று கள்வன் சொன்னுன். கிருஷ்ணனே, மூன்றறைகளும் நூறுரூபாய்களுமிருக்கின்றன வென்றுசொன்னுன். நியாயாதிபதியும் கிருஷ்ணனிடமிருந்து சாவியை வாங்கித் திறந்து பார்த்துக் கிருஷ்ணன் சொன்னபடியே யிருக்கக்கண்டு, கள்வனுக்கு மூன்று மாதம் கடுஞ்சிறையும், கங்காதரனுக்கு எழுபது ரூபாய் அபராதமும், விதித்தார். ஆகையினுல், ஒருபொழுதும் திருடுதலும் பொய் சொல்லுதலும் கூடாது.

மீனும்பாள்

## ஔவை தனிப்பாடல்.

### இனிது.

இனிது இனிது ஏகாந்த மினிது
அதனினு மினிது ஆதியைத் தொழுதல்
அதனினு மினிது அறிவினர்ச் சேர்தல்
அதனினு மினிது அறிவுள் ளோரைக்
கனவிலு நனவிலுங் காண்பது தானே.

### அரிது.

அரிதரிது மானிட ராதலரிது
மானிட ராயினுங் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்த லரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியு நயத்த லரிது
ஞானமுங் கல்வியு நயந்த காலையும்
தானமுந் தவமுந் தான்செய லரிது
தானமுந் தவமுந் தான் செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே.

## To Our Subscribers.

**Some of our subscribers are still in arrears for Vol. X. These and others will please remit their arrears for Vols. X and XI at once with their advance for the current volume or receive the next number by V. P. P. for the arrears due.**

### நமது சந்தாதாரர்களுக்கு.

நமது சந்தாதாரர்களிற்சிலர் இன்னும் 10-வது வாலியத்துக்குரிய சந்தாவைச்செலுத்தவில்லை. இவர்களும் மற்றவர்களும் 10, 11-வது வருஷப்புத்தகங்களுக்குரிய சந்தாவையும் 12-வது வாலியத்துக்குள்ள சந்தாவையும் உடனே அனுப்பல்வேண்டும். அல்லது அடுத்த சஞ்சிகையை பாக்கி யுள்ள சந்தா தொகைக்கு V. P. P. மூலமாக அனுப்புவதைப் பெற்றுக்கொள்ளல் வேண்டும்.

**D. K. Agency.**

*20th May*, 1903. அ. ப. ஏஜன்ஸி.

# "ANANDA MISSION"

## For the Propogation of Truth and Knowledge.

**As the Way to Health, Happiness and Life, Through Self-Help, Self-Control and Self Culture.**

***"EKAM SATYAM BRAHMA."—SRUTIVAK.***

"Seek Truth wherever you can find it,"
"But Make your Choice and Stick to it".
till you reach the end.

"*Truth is hard Finding !*" **Yes,** "*Uncompromising too*" **when** *whole*; **Yet Try!** "*Awake, Arise and Stop not till you reach the Goal.*"—*Sruti.*

"And Ye shall Know the Truth and the Truth shall make you Free"—Christ.

All persons who love Truth for its own sake and are willing to show good-will towards All, regardless of race, creed, religion, caste or color, will be eligible to become members, helpers or sympathisers of the Mission as it may suit their intelligence, development and selfless state.

Sincerity in thought, word and deed, an essential and unfailing condition to be scrupulously fulfilled by all.

***Satyameva Jayati.***

## Hail! Ananda Natesa!

*Sri Akandananda Satguruve Namaha.*

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As.: Back Nos. 8 As. each.

**English & Foreign Subscription 7s. 6d. net per annum.**

**Thin Paper Edition** for the People :—

**Subscrn. Price: Yearly Rs. 4; Half-yearly Rs. 2-2.**

**Single copy, current No. 5½ As.; Back Nos. 6 As. Each.**

**English & Foreign Subscription 5s 6d. net per annum.**

**If strictly Prepaid** at the commencement of the term, (*i.e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As, off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and avoid vexatious delay and needless correspondence.

### விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

**தளமான காகிதப்பதிப்பு:—** அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

**லேசான காகிதப்பதிப்பு:**—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும். ஏப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்து கொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்கு வாவுக்குமிடமிராது.